# சுவை நிறைந்த கேசரி நிமிடத்தில் தயாரிக்கலாம்.

மில்க்மெய்ட் கொண்டு தயாராகும் இந்த சுவை நிறைந்த கேசரியை உங்கள் குடும்பத்தினர் வெகுவாக விரும்புவார்கள். இவற்றை எளிதாகத் தயாரிப்பதில் உங்களுக்கு ஒரே ஆனந்தம்தான்.

**கேசரி**

4–5 பேருக்கு

சமைக்க ஆகும் நேரம்: 15 நிமிடங்கள்

தேவை

மில்க்மெய்ட்: ½ டின், ரவா: 1 கப்
நெய்: 150 கிராம் (¾ கப்)
தண்ணீர்: 2 கப், கேசரி பவுடர்: ¼ டீஸ்பூன்
முந்திரிப் பருப்பு: 8-10 (விரும்பினால்)
திராட்சை: 20 கிராம் (1½ டேபிள்ஸ்பூன்) (விரும்பினால்)

செய்முறை

1. வாணலியில் நெய்யை காய்ச்சவும்.
2. முந்திரிப் பருப்பையும், திராட்சையையும் பொன்னிறமாகும் வரை நெய்யில் வறுத்து தனியே எடுத்து வைக்கவும்.
3. நெய்யில் ரவாவை சேர்த்து பொன்னிறமாகும் வரை வறுக்கவும்.
4. இதோடு கேசரி பவுடர் கரைக்கப்பட்ட 2 கப் தண்ணீரை சேர்க்கவும். தொடர்ந்து கிளறி விடவும்.
5. தண்ணீர் உறிஞ்சப்பட்டவுடன் சூட்டை குறைத்து மில்க்மெய்டை சேர்க்கவும். நெய் துளிகள் வாணலியின் ஓரங்களில் படியும் வரை தொடர்ந்து கிளறிவிடவும்.
6. நெய் தடவிய தட்டில் ஊற்றவும். விரும்பினால் முந்திரிப் பருப்பையும் திராட்சையையும் தூவவும்.
7. சதுர வில்லைகளாகப் போடவும்.
8. சூடாகவோ, குளிர வைத்தோ பரிமாறவும்.

## விந்தை பல செய்திட மில்க்மெய்ட்

**இலவசம்**

மில்க்மெய்ட் ரெஸிப்பி புத்தகம்
அதனைப் பெற போஸ்ட் பேக் 22,
புது தில்லி-110019.
என்னும் முகவரிக்கு அனுப்பவும்.




TS McCann/MM/191 TM

நெஸ்லேயின் ஒரு



# கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை:
# ஏழை மாணவர்களுக்கு உதவி ரூ. 30,000

சென்ற ஆண்டை விட இந்தக் கல்வி ஆண்டுக்கு (91-92) ரூ 3000 அதிகரித்து மொத்தம் ரூ 30,000 உதவித் தொகை வழங்கப்படவிருக்கிறது. இத் தொகை பின்வருமாறு விநியோகிக்கப்படும் :

★★ பட்டமேற்படிப்பை அல்லது ஆராய்ச்சியை மேற்கொண்டிருக்கிற மாணவர்கள் இருவருக்குத் தலா ரூ. 1500/- வீதம் ரூ 3000/-

★★ இசை அல்லது நாட்டியம் பயிலும் இருவருக்குத் தலா ரூ. 1000/- வீதம் ரூ. 2000/-

★★ பன்னிரண்டு கல்லூரி மாணவர்களுக்குத் தலா ரூ. 1000/- வீதம் ரூ.12,000/-

★ ★ இருபத்தாறு பள்ளி மாணவர்களுக்குத் தலா ரூ. 500/- வீதம் ரூ.13,000/-

இவற்றுள் அமரர் கல்கி படித்த மூன்று பள்ளிக்கூடங்களில் மூன்று மாணவர்களுக்கு மூன்று உதவித் தொகைகள் ஒதுக்கப்படுகின்றன. மீதமுள்ள உதவித் தொகைகளைப் பெற, தமிழகமெங்கும் உள்ள கல்வி நிலையங்களில் படிக்கும் மாணவர்களிடமிருந்து அவர்கள் தங்கள் கைப்பட எழுதிய விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

உதவித் தொகைகளைப் பெற, மாணவ மாணவியர் படிப்பில் சிறந்தவர்களாகவும் அதே சமயம் கல்வியைப் பெற்றோர் உதவியுடன் மட்டும் தொடர முடியாத நிலையில் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாகவும் இருக்க வேண்டும். இந்த இரண்டையும் உறுதிப்படுத்தக் கல்லூரி அல்லது பள்ளி முதல்வரின் சான்றிதழுடன் விண்ணப்பிக்க வேண்டும். சென்ற கல்வி ஆண்டின் இறுதித் தேர்வில் பெற்ற மதிப் பெண்களின் நகலை முதல்வரின் கையொப்பத்துடன் இணைப்பது அவசியம்.

விண்ணப்பங்களை ஆராய்ந்து உதவித் தொகை பெறத் தகுதியுள்ள மாணவர்களை அறங்காவலர்கள் தேர்ந்தெடுப்பார்கள். அறங்காவலர்களின் முடிவே இறுதியானது.

விண்ணப்பங்கள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூலை 31, 1991.**

விலாசம் :

**நிர்வாக அறங்காவலர்,**
**கல்கி கிருஷ்ணமூர்த்தி**
**அறக்கட்டளை,**

நெ. 1, ஐந்தாவது தெரு, ஏரிவட்டம்,
நுங்கம்பாக்கம்,
சென்னை - 600 034.

''ஆட்சிக்கு
வந்தப்ப
'பாலைவனத்தில்
பயணம்
தொடங்குகிறது'ன்னு
சொன்னேன்....
இப்பப்
பாலைவனத்திலேயே
வந்து
முடிஞ்சுடுச்சே...!''





''இதுக்குத்தான் நான் அப்பவே
அடிச்சுக்கிட்டேன், இளைஞர்
அணிக்காரங்களுக்கு ரொம்ப
இடம் கொடுக்காதீங்கன்னு...
கேட்கலையே...!''



''அயோத்தி
ராமர்
நம்மை
ஆதரிக்கிற
மாதிரியும்
இருக்கு,
எதிர்க்கிற
மாதிரியும்
இருக்கு,
'போக்கை
மாத்திக்க'ன்னு
சொல்ற
மாதிரியும்
இருக்கு...
உம்...''



"'கிங் மேக்கர்,' 'கிங் மேக்கர்'ன்னு பலரும் சொன்னப்ப, ஒரு 'கிக்' கிடைச்சது என்னமோ நிஜம்தான்; ஆனா, உண்மையான 'கிங் மேக்கர்'கள் 'கிக்' கொடுத்து நம்மை வெளியே துரத்தி அடிச்சுட்டாங்களே!"



"தண்டவதே தோற்றால் தோற்றுட்டுப் போறேன்; நாட்டின் பொருளாதாரம் தண்டமாப் போகாம, தோற்றுப் போகாம காப்பாத்தப் பாருங்க!"



"தோற்றுப் போனதிலே ஒரு பெரிய வசதி. விசாரணை கமிஷன் அது இதுன்னு இனிமே ஒரு பய தொல்லை கொடுக்க முடியாது!"



"எம். ஜி. ஆர். ஆட்சிக்கு விளக்கு ஏத்தி வைக்கிறதா சொல்லிட வேண்டியதுதான்; அப்புறம் நம்ம ஆட்சியை நடத்திக்கிட்டுப் போக வேண்டியதுதான்!"

# சாட்டையடியாக ஒரு திருப்பம்!

O என். டி. ஆரின் உண்ணாவிரதம் நல்ல அரசியல் ஆதாயம் தேடும் பணி என்று நீங்கள் இன்னும் கொஞ்சம் அழுத்தமாகவே எழுதியிருக்கலாம். ஜனார்த்தன் ரெட்டி, என். டி. ஆருடன் சுமுகமாகப் பேசி உண்ணாவிரதத்தை நல்ல முறையில் முடிக்க உதவியிருக்கலாம் என்ற தலையங்கத்தின் வரிகள் ஏற்றுக் கொள்ளக் கூடியவை!
மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

O என். டி. ஆர். உண்ணாவிரதம் இருந்ததை 'பிளாக்மெயில்' என்று மாசுபடுத்தி உள்ளது கண்டிக்கத்தக்கது. ஆந்திர அரசு நீதி விசாரணைக்கு ஒப்புக் கொண்டாலும் நஷ்டஈடு குறித்து அறிவிக்கவில்லை. நீதி விசாரணையின் முடிவுப்படி நஷ்டமடைந்தவர்களுக்கு நஷ்டஈடு வழங்குவோம் என்று அறிவித்திருந்தால் என். டி. ஆர். உண்ணாவிரதத்தை வாபஸ் வாங்கி இருப்பார்.
மேட்டூர் அணை, பொன். ரவிச்சந்திரன்.

O ''தாய் வீடு'' - கதையல்ல. நிஜம். நம் வீடுகளில் நடக்கும் நிகழ்ச்சிகளை வரிக்கு வரி அப்படியே எழுதி, எல்லோருடைய நெஞ்சங்களையும் ''இது நம் வீட்டில் நடந்த நிகழ்ச்சி போலுள்ளதே'' என்று கேட்க வைத்த அற்புதச் சிறுகதை. மும்தாஜ்யாசீன் பாராட்டுக்குரியவர்.
புவனகிரி, ச. அருட்செல்வன்.

O ''கழுதை'' கதைக்கான படம் மிக மிகப் பொருத்தமாக வரையப்பட்டிருந்தது. கழுதை என்ற சொல்லை, மனிதனையும் மிருகத்தையும் மாறி மாறிக் குறிப்பிடப் பயன்படுத்தி, எழுத்தாளர் திறனை வெளிப்படுத்திய விதம் சுவாரஸ்யமாகவே அமைந்தது.
தஞ்சாவூர், ஏ. ஆர். லலிதா.

O இந்த வாரச் சிறுகதைகள் அனைத்தும் அருமை! அதிலும் ''கழுதை'' சிறுகதை ரொம்ப ரொம்ப அருமை. வாயில்லாத ஒரு பிராணியின் மேல் அக்கறை காட்டும் ஓமக்குச்சி இருபதாம் நூற்றாண்டில் ஒரு வித்தியாசமான நபர்!
திருச்சி - 22, தது. சிங்காரவேலன்.

O அழகாகப் பின்னப்பட்ட கூந்தல் எழிலை ரசித்துக் கொண்டிருந்ததைப் போல் எஸ். லக்ஷ்மி காந்தனின் 'பொய் முகங்கள்' படைப்பில் ஆழ்ந்திருந்த போது, புதிய திருப்பமாக ஒரு சாட்டை அடி விழுந்தது!
குமாரபாளையம், மூ. செ. முருகேசன்.

**வட்டமேஜை**

O பொய் முகங்கள் கதையில் இருபதாம் நூற்றாண்டுப் பெண் சுப்ரஜா முரளியின் பொய் முகத்தைக் கிழித்ததை விட, தந்தை மகளின் மனோநிலை புரிந்து அவள் ஆவேசத்தை ஏற்றுக் கொண்டது பாராட்டுக்குரியது.
சென்னை - 23, ஆர். திலகவதி.

O 'காடு அழிந்தால்நாடு தாங்காது' என்ற தலைப்பில் கல்கியில் இடம்பெற்றிருந்த கட்டுரை மிகவும் அருமை. வனச் செல்வங்களை அழிப்பதனால் பாதிக்கப்படுவது நாடும், நாட்டு மக்களும்தான் என்பதை அனைவரும் புரிந்து கொண்டு செயல்பட்டால் சரி.
ஊஞ்சவேலாம்பட்டி, டி. பசுபதி.

O 'ஜென்டில்மென்ஸ் கேம்' என்று கிரிக்கெட்டைச் சொல்வது போல, தமிழ் நாடகத்தையும், ஏன், சினிமாவையும் கூடச் சொல்ல வைப்பார் போலிருக்கே, விசு! அட, அவர் மனந்திறந்து ஒய். ஜி. எம். ஐப் பாராட்டி ஸதைத்தான் சொல்றேன்!
மணலிப்பட்டு, எஸ். ஹரிஹரன்.

O விசு குறிப்பிடும் அந்தக் காலகட்டத்தில், அரங்கேறும் நாடகங்களில், இரு (ஒரு அல்ல) பெண் கதாபாத்திரங்களுக்கு மேல் இருக்கக் கூடாது என்பது எழுதப்படாத விதி. இந்த விதியை மீறியவர் விசு மட்டும் அல்ல; வேறு பலரும் உண்டு.
சென்னை - 59, ராமாபுரம் சந்துரு.

O காங்கிரஸ் தலைவர் நரசிம்மராவ் அவர்களின் பலத்தையும், பலவீனத்தையும் அலசி ஆராய்ந்து எங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்திட்ட 'கல்கி'க்கு வாழ்த்துக்கள் பல!
கொடுக்கூர், என். அமுதா கிருஷ்ணமூர்த்தி.

O நம் இந்திய அணியில் கபில், மனோஜ் பிரபாகர் தவிர வேறு திறன்மிக்க வேகப்பந்து வீச்சாளர் இல்லாததால் நாம் எத்தனையோ முறை வெற்றியின் விளிம்பிலிருந்து நழுவித் தோல்வியைச் சந்தித்திருக்கிறோம்.
இந்த இக்கட்டான சூழ்நிலையில் 'அபய்குருவில்லாவின்' வருகை இந்திய கிரிக்கெட் அணிக்கு ஒரு வரப்பிரசாதம் ஆகும். இந்த அரிய வாய்ப்பை இந்திய கிரிக்கெட் அணியும், அபய் குருவில்லாவும் திறமையாகப் பயன்படுத்தி எதிரிகளுக்குச் சிம்ம சொப்பனமாக விளங்க வேண்டும் என்பதே நம் விருப்பம்.
கும்பகோணம், கவிட் ரவி.



O என்னுடைய உடைந்து விழுந்த பற்களைத்தான் 'காஸ்மெடிக் டென்டிஸ்ட்ரி' முறையில் மீண்டும் பொருத்தி சிகிச்சை அளித்தார் டாக்டர் பரமேஸ்வரன். ஒட்ட வைத்த பல் என்று சொன்னால்தான் தெரியும்.
வடபழநி, எஸ்.பி. ராமச்சந்திரன்.

# ஏன் பள்ளிக்கூடம் போகிறீர்கள்?

– இந்தக் கேள்வியைக் கேட்ட போது சில மாணவர்கள் வழங்கிய பதில்கள்:

O பள்ளிக்கூடம் போறது படுபோர். அம்மா - அப்பா ரொம்ப வற்புறுத்தறாங்க; கடனேன்னு போறேன். பாடம் படிக்க இஷ்டமேயில்லே. ரொம்ப அவசியம்னா இப்பத்தான் பிரைவேட்டா சொல்லித் தர்றாங்களே படிச்சுக்கிட்டாப் போச்சு.

O டெலிவிஷனில் மத்தியானம் யூ. ஜி. ஸி. ப்ரோக்ராம் இருக்கு; அதைப் பார்த்துத் தெரிஞ்சுக்கிட்டாப் போவுது. எதுக்காக ஸ்கூலுக்குப் போகணும்? 'போர்'!

O என்ன படிச்சு என்ன, என் அண்ணன் ஒரு கிராஜுவேட்; வேலைக்கு நாயா அலையறான். எதுக்குப் படிக்கணும்? ஏதேனும் தொழில் கத்துக்கிட்டு, அது மூலமா சம்பாதிச்சுக்கிட்டு, ஓய்வு நேரத்துல படிச்சுக்கிட்டாப் போச்சு.

O எனக்குத் தெரிஞ்ச பையன் ஒரு மளிகைக் கடைல வேலை பார்க்கறான். கொஞ்ச நாள்ல அவனே தனியா ஒரு கடை ஆரம்பிக்கப் போறானாம். அவன் என்ன படிச்சான்? சொந்தமா வியாபாரம் பண்ணப் போறான்; படிப்பு தேவைதானா?

O இப்ப படிக்காம விட்டாக்கூட கவலையில்லே. டீ. வி. இருக்கு; நன்னன் இருக்காரு; முதியோர் கல்வித் திட்டம் இருக்கு!

இக் கருத்துக்களை எங்கள் பெயருடன் வெளியிடாதீர்கள் என்று மாணவர்கள் கூற வில்லை. அவர்களுடைய பெற்றோர்கள் வலியுறுத்தினர்.

''கண்டதை உளறுவாங்க'' என்றனர். ஆனால் இவற்றையெல்லாம் அர்த்தமற்றக் கருத்துக்களாக நாம் எண்ணவில்லை. எனவேதான் வெளியிடுகிறோம். யோசித்துப் பார்த்தால் ஒவ்வொரு கருத்தின் பின்னணியிலும் இன்றையக் கல்வி முறை - பாடத் திட்டம் - பற்றிய ஒரு சிறந்த விமர்சனம் இருப்பதை உணரலாம்.

சில ஆக்கபூர்வமான தன்னம்பிக்கையுடன் கூடிய கருத்துக்களும் கிடைத்தன. அவற்றைப் பெயர்களுடன் வெளியிடுகிறோம்:



✦ ஜெயலட்சுமி



✦ விஜய்

**ரமணன் :** பள்ளிக்கூடம் போவது வெறுமே பாடம் படிக்க மட்டுமல்ல... நம்முடைய



★ ரமணன்

பிற திறமைகளை வெளிக்காட்டவும், வளர்த்துக் கொள்ளவும் நமக்கு வாய்ப்புக் கிடைக்கிறது. விளையாட்டில் எனக்குத் தீவிர ஆர்வம் உண்டு. க்ராஸ் கன்ட்ரி ரேஸ் (நான்கு கிலோ மீட்டர் தூரம்) ஹாக்கி, நீச்சல், குத்துச் சண்டை போன்ற விளையாட்டுப் போட்டிகளில் நான் பங்கு கொண்டு, வெள்ளிப் பதக்கங்களைப் பரிசாகப் பெற்றிருக்கிறேன். இதுபோன்ற விளையாட்டுத் திறமைகளை நான் மேன் மேலும் வளர்த்துக் கொள்ள, பள்ளிக்கூடம் பெரிதும் உதவுகிறது. படிப்படியாக் உயர்ந்து, தேசிய அளவிலும் பிறகு உலக அளவிலும் புகழ்பெற, பள்ளிக்கூடம்தான் அடித்தளம் அமைக்கிறது.

எச். ஜெயலட்சுமி:

வீட்டிலுள்ள சொந்தங்களுக்கு அப்பால், நட்பு என்ற புதிய எல்லைக்கு பள்ளிக்கூடம் அழைத்துப் போகிறது. பத்து வருடங்களில் எத்தனையோ தோழிகள். அனுபவம் வாயந்த ஆசிரியர்கள் கூட நட்பு என்ற வட்டத்துக்குள் வருகின்றனர். வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்து விட்டால் இதுபோன்ற அறிமுகங்களுக்கும் அறிவும் மனமும் விசாலப்படவும் வாய்ப்பே இல்லை.

ஆர். விஜய்:

'அடேயப்பா! இவ்வளவு புஸ்தகங்களா! இவ்வளவு படிப்பா!' என்று என்னுடைய பாடப் புத்தகங்களைப் பார்த்துப் பெரியவர்கள் அதிசயிக்கும் போது பெருமையாகத்தான் இருக்கிறது. அந்தப் பெருமையிலேயே புத்தக மூட்டையின் சுமை தெரிவதில்லை! பலதரப்பட்ட பாடங்களைப் படிப்பதும் சுவையான அனுபவம் தான். மேன்மேலும் நிறையப் படிக்கப் போகிறோம் என்ற எதிர்பார்ப்பே த்ரில்லிங்காக இருக்கிறது.



✱ ப்ரியா

எஸ். ப்ரியா:

பள்ளிக்குச் செல்வதை, இந்த வயதின் கட்டாய, ஆனால் சந்தோஷமான கடமையாகவே கருதுகிறேன். இந்த ஆர்வத்துக்குப் பள்ளிக்கூடமும் உறுதுணையாக இருக்க வேண்டியது அவசியம். நான் படிக்கும் இந்த ஹையர் செகண்டரி பள்ளியில் படிப்பு, விளையாட்டு தவிர, நுண்கலைகள், கைவினைப் பொருட்கள் தயாரிப்பு முதலிய மனதுக்குகந்த பயிற்சிகளும் அளிக்கப்படுகின்றன. பாடம் கற்றுத் தரும் இயந்திரகதியான நிறுவனமாக இல்லாமல், பயனுள்ள வகையில் பொழுதுபோக்கும் வசதி உள்ள பயிற்சிக்கூடமாக இருப்பதாலேயே நான் பள்ளிக்கூடம் போக மிகவும் விரும்புகிறேன்.

பேட்டி, படங்கள் : பிரபுசங்கர்.

---



காதலி : ''அன்பே! நாம காதலிக்கிற விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது...''

காதலன் : ''ஏன்?''

காதலி : ''தெரிஞ்சா, எனக்கு மாப்பிள்ளை பார்க்கிறதை நிறுத்திடுவாங்களே!''

- கே. ரமேஷ்ராம்.



## சத்யராஜ்: மாணவர் ஸ்பெஷல் சந்திப்பு...

விஜயாகார்டனில் 'பிரம்மா' பட ஷூட்டிங். பத்தாம் வகுப்பு படிக்கும் ஸ்ரீராம், தீபா இருவரும் 'மாணவர் ஸ்பெஷலு'க்காக சத்யராஜை சந்தித்துச் சுமார் ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீராம் : உங்களுடைய பசங்க எங்கே படிக்கிறாங்க?

சத்யராஜ் : பெண் திவ்யா ஆறாம் கிளாஸ். பையன் பேர் சிபி. நாலாம் கிளாஸ். இரண்டு பேருமே ஷெர்வுட் ஹால் ஸ்கூல்ல படிக்கிறாங்க.

தீபா : படிப்புல எப்படி? ஃபர்ஸ்ட் ரேங்கா? இல்லை...

சத்யராஜ் : பெண்ணை விட பையன் பெட்டர். ஆனாலும் இரண்டு பேருமே முதல் ஏழெட்டு ரேங்க்குக்குள்ள வந்திடு வாங்க.

தீபா : நீங்கதான் புரோகிரஸ் ரிப் போர்ட்ல கையெழுத்துப் போடுவீங்களா? மார்க் குறைஞ்சா திட்டு, அடி உண்டா?

சத்ய : ம்... நான் கையெழுத்துப் போடறதோட சரி! மத்தபடி அவங்க அம்மாதான் எல்லாம். திட்டு, அடியெல்லாம் அப்பப்ப உண்டு. அவங்க அம்மா அதைக் கவனிச்சுப்பாங்க.

ஸ்ரீராம் : நீங்க படிச்சது எங்கே?

சத்ய : கோயம்புத்தூர்ல. சபர்பன் ஹை ஸ்கூலில்.

தீபா : ஸ்கூலுக்கு 'பஸ்'ல போவீங் களா? சைக்கிளில் போவீங்களா?

சத்ய : இரண்டிலுமில்லை. நடந்துதான் போவேன். ஸ்கூல்ல மணியடிச்சப்புறம் தான் வீட்டை விட்டே கிளம்புவேன்!

ஸ்ரீராம் : அப்ப தினம் ஸ்கூலுக்கு லேட்டா?

சத்ய : ஊகூம். ஸ்கூலுக்கு நேர் எதிர்த்த வீடு எங்களோடது. எங்க வீட்லே இருந்து பார்த்தா என் கிளாஸ் ரூம் கூடத் தெரியும்! எட்டாவது படிக்கும் போது, ஒரு கேள்விக்குப் பதில் சொல்லலைன்னு வாத்தியார் பெஞ்சு மேல ஏறி நிற்கச் சொன்னார். நான் பெஞ்சுல நிற்கிறதை எங்க வீட்டிலேயிருந்து என் அம்மா பார்த்துட்டு, மத்தியானம் வீட்டுக்குச் சாப்பிடப் போனபோது செமை டோஸ்!

ஸ்ரீராம் : என்னது! பெஞ்சு மேல ஏறி நிற்கச் சொல்லுவாங்களா? அதுவும் எட்டாவது படிக்கிற பசங்களை?

சத்ய : நீ ஒண்ணு! பதினொண்ணாம் கிளாஸ் படிக்கும் போது கூட எங்க கணக்கு வாத்தியார் முட்டி போடச் சொல்லுவாரு; பெஞ்சு மேல ஏறி நிற்கச் சொல்லுவாரு!

தீபா : பிற்காலத்துல பெரிய சினிமா ஸ்டாராய் வருவோம்னு எதிர்பார்த்தீங் களா?

சத்ய : நிச்சயமாக இல்லை. காலேஜ்ல படிச்சு முடிச்ச பின், சினிமா டைரக்டராக ணும்ன்ற ஆசையில மெட்ராஸ் வந் திட்டேன். ஆறு வருஷம் சான்ஸ் கேட்டு அலைஞ்சேன். கடைசில சின்னச் சின்ன வேஷங்களில் நடிக்க சான்ஸ் கிடைச்சது. நடிகனாயிட்டேன்.

ஸ்ரீராம் : உங்களுக்குப் பிடிச்ச நடிகர் யார்?

சத்ய : எம். ஜி. ஆர்., சிவாஜி. நிறைய

சினிமா பார்ப்பேன்.

தீபா : உங்க அப்பா பர்மிஷன் குடுப்பாரா?

சத்ய : பர்மிஷனா? நான் நாலு படம் பார்த்தா, ஒரு படத்துக்கு அப்பாவோட பர்மிஷன் வாங்கியிருப்பேன். வீட்டுக்குத் தெரியாம பார்த்த சினிமாதான் நிறைய. நீங்க நிறையப் படம் பார்ப்பீங்களா?

ஸ்ரீராம் : வாரா வாரம் டீ.வி.லேயே இரண்டு சினிமா பார்த்திடறோமே!

தீபா : அது தவிர வீடியோல. நான் புதுப் படங்களா கேஸட் கொண்டு வருவேன். அம்மா போனா பழைய படங்கள் கேஸட்டுதான் கொண்டு வருவாங்க. ஆனா, பரீட்சை சமயத்துல, கேஸட்டே வாங்க மாட்டோம்.

ஸ்ரீராம் : உங்க பசங்களுக்குப் பிடிச்ச ஆக்டர் யாரு?

சத்ய : பெண்ணுக்குச் சத்யராஜ் பிடிக்கும். பையனுக்குப் பிடிச்சது கமல்தான்.

தீபா : சினிமாவுல குதிரை ஓட்டறீங்களே! உங்களுக்கு நிஜமாவே குதிரை ஓட்டத் தெரியுமா?

சத்ய : ஓ! சினிமாவுக்காகக் கத்துக்கிட்டேன்.

ஸ்ரீராம் : ஒரு படத்துல சின்ன ஏரோப்ளேன் ஓட்டுவீங்களே! அதுவும் கத்துக்கிட்டீங்களா?

சத்ய : இல்லை. சும்மா ஓட்டற மாதிரி ஆக்டிங்தான். நான் ஓட்டற மாதிரி குளோஸ் அப் எடுத்துக்கிட்டு வேற யாராவது ஓட்டும் போது எடுத்து ஒண்ணாச் சேர்த்துடுவாங்க.

தீபா : சினிமாவுல பயங்கரமா சண்டை போடறீங்க. நிஜத்துல சண்டை போட்டிருக்கீங்களா?

சத்ய : ஊகூம். ஒரே ஒரு தடவை காலேஜ்ல படிக்கிற போது ஸ்டிரைக்கில் கலந்துக்கிட்டேன். போலீஸ்காரங்க அடிச்சுத் துரத்தினாங்க. பயந்து ஓடி வந்துட்டேன். செருப்பு அறுந்து போயிடுச்சு. வீட்டுக்கு வந்தப்போ, 'எங்கடா செருப்பு?'ன்னு கேட்டாங்க. ஒரு செருப்பு அறுந்து போச்சு. இன்னொண்ணையும் தூக்கிப் போட்டுட்டு வந்திட்டேன்னு சொல்லி சமாளிச்சேன்.

ஸ்ரீராம் : உங்க பசங்களை ஜாலியா கூட்டிக்கிட்டு பீச், கடை, ஓட்டல்னு போயிருக்கீங்களா? அப்படிப் போனா ஜனங்க கும்பல் கூடிடுவாங்களே!

சத்ய : பீச், கடைக்கெல்லாம் பசங்க அம்மா கூடப் போயிடுவாங்க. எப்பவாவது ஓட்டலுக்குக் கூட்டிக்கிட்டுப் போவேன். அங்கே அவ்வளவு கும்பல் கூடாது. ஒரு சிலர் ஆட்டோகிராப் கேட்பாங்க. போட்டுக் குடுத்துடுவேன்.

தீபா : ஷூட்டிங்குக்கு அவங்களை அழைச்சிக்கிட்டு வருவீங்களா?

சத்ய : எப்பவாச்சும் அழைச்சுக்கிட்டு வருவேன். அவங்களுக்கும் ஸ்கூல் லீவா இருந்து எனக்கும் வெளியூர்ல ஷூட்டிங்னா, குடும்பத்தோட போவேன்.

தீபா : நான் எந்த ஆக்டரையும் நேரில் பார்த்ததில்லை. உங்களைத்தான் முதல்ல பார்க்கிறேன். என் ஃபிரண்ட்ஸ்கிட்டே யெல்லாம் சொல்வேன். ரொம்ப தேங்க்ஸ்.

ஸ்ரீராம் : தேங்ஸ். திவ்யா, சிபிக்கு 'ஹாய்' சொல்லுங்கள்.

சத்ய : ஆல் தி பெஸ்ட்!

ஏற்பாடு, தொகுப்பு :
**எஸ். சந்திரமௌலி**

படம் : யோகா.

# தமிழகத்தில் தேர்தல் நடந்த விதம்...

தேர்தல் முடிவுகளும் அவை பற்றிய அலசல்களும் ஒருபுறம்; புதிய ஆட்சிகளுக்கு வழங்கப்படும் அறிவுரைகள் மறுபுறம். இவை இருக்கட்டும், தமிழகத்தில் தேர்தல் நடைபெற்ற விதத்தைக் கொஞ்சம் விமர்சனம் செய்யுங்களேன்! தலைவர்களும் அவர்களின் தொண்டர்களும் பேசிய விதம், நடந்து கொண்ட முறை உங்களுக்கு ஏற்புடையதாக இருந்ததா இல்லையா? பிடித்தது எது? பிடிக்காதது எது? கட்சி சார்பின்றிப் பொதுப்படையாக எழுதப்படும் சிறந்த ஒரு பக்க அலசலுக்குப் பரிசு ரூ. 50/- சிந்தனைச் சிதறல்களுக்கு ஆறுதல் பரிசு. தவிர, பொன் விழா மேடையில் மிக அதிகமான முதல் பரிசுக் கட்டுரைகள் எழுதிய மாணவருக்கு ரூ. 2500 சிறப்புப் பரிசு. கல்லூரி விலாசம், வீட்டு முகவரி இரண்டும் குறிப்பிட்டுக் கட்டுரை அனுப்பக் கடைசி தேதி 6.7.91 உறை மீது ''தமிழகத்தில் தேர்தல்....'' என்று குறிப்பிட மறவாதீர்கள்.

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**




**கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி**

# காலை உணவிற்கு சுவைமிக்க பானி மிக்ஸ் சாப்பிடுங்கள்

## கூடவே ரூ.4/- சேமியுங்கள்



### அறிமுகம்!
### ரீஃபில் பேக்கிலே பானி மிக்ஸ்

காலை உணவிற்கு சுவையுடன் ஊட்டச்சத்தும் கூடிய பானிமிக்ஸை உங்கள் குடும்பத்திற்கு தினந்தோறும் அளியுங்கள். அத்துடன் பணமும் சேமியுங்கள்.

உங்களுக்குப் பிடித்தமான பாரிட்ஜ் இப்பொழுது சிக்கனமான ரீஃபில் பேக்கில் கிடைக்கிறது.




டின் பேக்கைவிட ரூ.4/- விலை குறைவு

**பானி மிக்ஸ்**Ⓣ உடனடியாக தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்
நாச்சுரல் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

இப்பொழுது தேர்ந்தெடுத்த இடங்களில் மட்டுமே கிடைக்கிறது.

GL/331/91 TAM


பேராசிரியரே, நீங்களும் ஒரு ஆய்வு நூல் எழுதுங்க... அனுதாப அலை இருந்தும் மெஜாரிட்டி பெறாதது ஏன்...?


எனக்குத் தோல்வி, உங்களுக்குப் படு தோல்வி... ஆனாலும் என்ன? நம்ம தொப்பிக்குள்ளே தான் இருக்கு!
காங்கிரஸ்
ஆதரவுக் கோரிக்கை


நம்மையும் சேர்த்துக்கிங்க... காங்கேயத்துக்கு அனுப்புங்க ஜெயிச்சிட்டு வந்துர்றேன்!




# கல்கி

1991 ஜூன் 30
மலர் : 49 இதழ் : 48
பிரஜோத்பத்தி ஆனி 16




## மாறிய ஆட்சி; மாறாத பிரச்னைகள்!

பிரதமர் பதவிக்கான போட்டி தீவிரமடைந்துள்ளது. பவாரா, நரசிம்மராவா, அல்லது ஒருவேளை அர்ஜுன் சிங்கா? யார் என்பது முக்கியமில்லை. பிரதமராக வரப் போகிறவர் என்ன செய்யப் போகிறார்? அதுதான் முக்கியம். போட்டி வலுத்து, அதனாலேயே மனக்கசப்பு வளர்ந்து, உட்கட்சிப் பூசல் உருவாகும் எனில், எவ்வளவுதான் திறமைசாலியானாலும் அவர் பதவிக்கு வருவதால் பலனிராது. இதனைத் தவிர்க்க, ஜனநாயக முறையில் தேர்தல் நடத்துவதே சிறந்தது. மேலும், கட்சித் தலைமை, ஆட்சித் தலைமை இரண்டுமே ஒருவரிடம் இருக்க அவசியம் இல்லை. ஆனும் கட்சித் தலைமை என்பது மிகுந்த செல்வாக்குள்ள பதவி என்பதால், சுமுகமான முடிவுக்கு வர இப்படிப் பிரிப்பது உதவும். அடிப்படையில், தன்னலனை விடத் தேச நலனைப் பெரிதாக எண்ணுவோர் விட்டுக் கொடுக்கத் தயங்க மாட்டார்கள்.

பிரதமராக வருபவர் கட்சியைக் கட்டிக் காப்பதுடன் ஆட்சியை வேறு கட்டிக் காத்தாக வேண்டும். ஏனெனில் காங்கிரஸுக்கு இன்று பூரண மெஜாரிட்டி இல்லை. எனவே ஜனதா தளத்தின் ஆதரவைக் கோரிப் பெறுவது அவசியம். இதனைப் பெற யார் பிரதமராக வருவது அனுகூலம் என்பதையும் காங்கிரஸ் தலைவர்கள் யோசித்தால் நல்ல முடிவுக்கு வர இயலும்.

புதிய பிரதமரின் பணி எவரெஸ்ட்டில் ஏறுவது போல் அத்தனை கஷ்டமானது. பிரச்னைகள் ''கவனி, கவனி'' என்று கதறுகின்றன. குறிப்பாகப் பொருளாதாரப் பிரச்னை. பணவீக்கம், கறுப்புப் பணம், விலைவாசி உயர்வு, அபரிமித அந்நியக் கடன்கள் - இவற்றை மனத்தில் கொண்டு தயாரிக்கப்பட வேண்டிய பட்ஜெட்.

உற்பத்தி பெருகி, செல்வம் உருவாகி, பரவலாகக் கீழ்மட்டம் வரை சென்றடையச் சிறப்பான திட்டங்கள் தேவை. சோஷலிஸம், அரசுடைமை இவற்றை மாற்றி, தனியார் துறைக்கு ஊக்கமளிப்பதே வழி. பர்மிட் லைசென்ஸ் முறை ஒழிந்தாலே லஞ்ச ஊழல் கணிசமாகக் குறைந்து போகும். இதையும் மீறி லஞ்ச ஊழல் புரிவோரை விசாரிக்க அம்புட்ஸ்மான் (லோக் பால் - லோக் அயுக்த்) அமைப்பு தேவை.

மதச் சார்பின்மை என்பது மதங்களைப் புறக்கணிப்பது அல்ல. எம்மதமும் சம்மதம் என்ற அடிப்படையில் அனைவருக்கும் சமநீதி கிடைக்க வேண்டும். முஸ்லிம்கள், சீக்கியருக்கு நம்பிக்கை பிறக்கச் செய்ய வேண்டும். இட ஒதுக்கீடு சரி, ஆனால் அதற்குக் கால வரம்பு நிர்ணயித்து அதற்கு முன் பிற்படுத்தப்பட்டவர்கள் தன்னம்பிக்கை பெற வழிவகுக்க வேண்டும்.

மாநிலங்களுக்குச் சுயாட்சி மட்டுமின்றி கிராமப்புறப் பஞ்சாயத்துக்கள் வரை அதிகாரம் பரவலாக்கப்படுதல் அவசியம். கிராமப்புறத்தைப் பிரதானமாகக் கொண்ட தொழில் - பொருளாதாரத் திட்டமே வளமை பெருக்கும்.

வாழ்க்கைக்குப் பயன்தரும் கல்வி, அதனுடன் கூடவே குடும்பக் கட்டுப்பாடு, சுகாதாரம், சுற்றுச் சூழல் பாதுகாப்பு போன்ற பயன்தரும் அம்சங்களின் போதனை என்று பலவாறு சிந்தித்துக் கல்வித் திட்டம் சீரமைக்கப்பட வேண்டும்.

இவை எல்லாவற்றையும் விட முக்கியம் மக்கள் முன் ஒரு பெரிய லட்சியத்தை வைத்து, அது நிறைவேற 'ஒன்றுபட்டுப் பாடுபடுவோம்; முன்னேறுவோம்' என்று கூறி, அவர்களை ஊக்குவித்து, அதன் மூலம் நாட்டையும் உயர்த்துவது.

''சந்திர மண்டலத்தைச் சென்றடைவோம்'' என்றார் கென்னடி. அமெரிக்கா சிலிர்த்தது; உழைத்தது; வென்றது. அந்த வெற்றியுடன் கூடவே அமெரிக்க விஞ்ஞான நுட்பம் பிரமிக்கத்தக்க அளவில் முன்னேறி, அதுவே பல துறைகளில் நாடு உயர உதவியது.

புதிய பிரதமர் அவ்வாறே கங்கா - காவேரி இணைப்பை ஒரு லட்சியமாக ஏன் மக்கள் முன் வைக்கக் கூடாது?

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# இன்றையக் கல்வி முறையில் என்ன கோளாறு?

கலந்துரையாடலில் பங்கு பெற்றவர்கள் : திருமதி. ராதா - குடும்பத்தலைவி, திரு. வெங்கடாஜலம் - முதல்வர், இந்து மேல் நிலைப் பள்ளி, இந்திரா நகர், சென்னை - 20, கவிதா, சாருகேசி, சங்கரராம் - மாணவர்கள்.

ராதா : வளரும் பருவத்தில் நான் பெற்ற கல்வி பெருமிதம் கொள்ளும் வகையில் என்னை உருவாக்கியிருப்பதாக நான் கூறுவதற்கில்லை. வாழ்க்கையின் ஏதோ ஒரு கட்டத்தில் நாம் சுயமாகச் சிந்திக்கத் தொடங்குகிறோம். நடைமுறை வாழ்க்கையை நேரடியாகச் சந்திக்கத் தொடங்குகிறோம். அப்படிப்பட்ட ஒரு கட்டத்தை அடைந்தபோது நான் தெரிந்து கொண்டது இதுதான் : நடைமுறை சாத்தியமான வாழ்க்கையை மேற்கொள்வதில் உள்ள பிரச்னைகளைச் சந்திப்பதற்குப் போதிய வகையில், நான் பெற்றிருந்த கல்வி என்னைத் தயார் செய்திருக்கவில்லை. இதைப் பற்றி யோசித்தபோது நான் உணர்ந்து கொண்டது.... நமது கல்வி முறையில் இன்னும் வேறு ஏதோ ஒன்று சேர்க்கப்பட வேண்டும். அந்த வேறு ஏதோ ஒன்று நம்மை ஒரு வேலைக்குத் தயார் செய்வதாக மட்டும் இல்லாமல், நாம் நம்புகிறவற்றை எந்த விதத்திலும் விட்டுக் கொடுக்காமல் நமக்கு நாமே நேர்மையாக நடந்து கொள்ளும் வகையில்.... மேலும் ஒரு முழுமையான வாழ்க்கையை வாழும் வகையில்.... இருக்க வேண்டும். ஆனால் இன்றைய கல்வி முறை 'இன்ஃபர்மேஷன் ஓரியன்டட்' ஆகத்தான் இருக்கிறது. பிற்காலத்தில் ஒரு நல்ல வேலையைப் பெற உதவக் கூடிய கல்வித் தரத்தைக் குழந்தை அடைவதற்கு அவசியமானவை என்று பெரியவர்கள் கருதும் தகவல்களைத்தான் கல்வி அளிக்கிறது. ஆனால் வாழ்க்கை என்பது ஏதோ ஒரு வேலையோடு மட்டும் நின்று விடுவதில்லை. ஆளுமையை வளர்த்துக் கொள்வது, சூழ் நிலை - மனித உறவுகள் தொடர்பான நல்லதொரு மனப்பாங்கை வளர்த்துக் கொள்வது... இவையும் கூட வாழ்க்கைதான். இவற்றையெல்லாம் பெற இன்றையக் கல்வி முறை எந்த வகையில், எந்த அளவுக்கு உதவுகிறது?

வெங் : கல்வி முறை பற்றிக் குறை கூறுவதில் அர்த்தம் இல்லை. ஒரு குழந்தை பிறந்தவுடனேயே அதன் பெற்றோர் என்ன நினைக்கிறார்கள்? அது ஒரு என்ஜினியராகவோ அல்லது டாக்டராகவோ அல்லது எம்.பி.ஏ. வாகவோ ஆகவேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறார்கள். இலக்கு அவ்வாறு இருக்கும்போது அளிக்கப்படும் கல்வி முறையும் அதற்கு ஏற்றபடிதான் இருக்க முடியும். கல்வியாளர்கள் அதனை அப்படி அமைப்பது தவிர்க்க முடியாததாக ஆகிவிடு கிறது. குழந்தைகளின் மனங்களில் சில பண்புகளை வளர்க்க வேண்டியதும் அவசியமானதுதான். அதற்குப் பாடத்திட்டங்களில் சில மாற்றங்களைச் செய்வது அவசியம். அவற்றின் மூலம் ஒவ்வொரு குழந்தையும் இந்தியப் பாரம்பரியம், பண்பாடு, பற்றிப் பெருமை கொள்ள முடியும்.

கவிதா : பொதுவாக, எல்லாப் பெற்றோருமே தங்கள் குழந்தை வருங்காலத்தில் ஏதோ ஒரு நிபுணராக ஆக வேண்டும் என்பதை அதன் சிறு வயதிலேயே முடிவு செய்து விடுகிறார்கள். அதன் காரணமாக, ஒவ்வொரு நாளும் பத்து மணி நேரமாவது பாடங்களைப் படிக்க வேண்டும் என்கிறார்கள். எனவே, பாடப்புத்தகங்களைத் தவிர வேறு எதையுமே குழந்தையால் தெரிந்து கொள்ள முடிவதில்லை. வளரும் குழந்தைக்கு அது மட்டுமே போதுமான இல்லை. அதற்கு மேலும் வேறு ஏதோ



◆ சங்கரராம்



✤ வெங்கடாசலம்

வொன்று தேவைப் படுகிறது. டீ.வி. ஒரு 'இடியட் பாக்ஸ்'தான். ஆனால் அதிலும் கூடச் சமயங்களில் பல தகவல்களைத் தெரிந்து கொள்ள உதவும் சில நிகழ்ச்சிகள் இடம் பெறத்தான் செய்கின்றன. ஆனால் அவற்றைப் பார்க்க அனுமதிக்கப்படுவ தில்லை. உலகைப் பற்றிய தகவல்களைத் தெரிந்து கொள்வது அவசியமில்லையா? அது போலவே, பள்ளிக்கூடத்திலும் வழக்க மான பாடப்புத்தகம் அல்லாத பொது அறிவுப் புத்தகங்களைப் படிப்பதற்கும் மாணவர்கள் ஊக்குவிக்கப்பட வேண்டும்.

சங்கர் : வாழ்க்கையில் வெற்றி பெற இன்றையக் கல்வி முறை பெரிதும் வழி செய்கிறது. அது ஒரு பெரும் சுமையாகி விட்டது என்கிற ஒரு பொதுவான கருத்து நிலவுகிறது என்பது வாஸ்தவம்தான். ஆனால், 'ஸர்வைவல் ஆஃப் தி ஃபிட்டஸ்ட்' என்கிற நிலையில் இதைத் தவிர வேறு வழியில்லை. வாழ்க்கையில் ஓரளவுக்கு வெற்றி பெறத் தேவையான எல்லாவற்றையுமே இந்தக் கல்வி முறை அளிக்கிறது என்றுதான் கூறவேண்டும்.

ராதா : 'டிமாண்ட் அண்ட்சப்ளை' என்கிற அடிப்படையிலேயே இன்றையப் பள்ளிகள் இயங்குகின்றன. பரீட்சையில் வெற்றி பெறுவதையே நோக்கமாகக் கொண்ட 'ரிஸல்ட் ஓரியன்டட்' பள்ளிகள் அதிகம். போட்டியிலும் பரீட்சையிலும் நம்பிக்கை வைக்காமல் பயிற்றுவிப்ப தையே நோக்கமாகக் கொண்ட ஒரு சில பள்ளிகள் இன்னொரு புறம். இவற்றின் அணுகு முறைகளும் கல்வி முறைகளும் வேறு படுகின்றன. ஆனால் பொதுவாக, பெரும்பாலான பள்ளிகள் பெரும்பாலான பெற்றோரின் தேவைகளைக் கருத்தில் கொண்டு, படித்து முடித்து வேலைக்குப் போவதற்கு உதவும் ஏதோவொரு வகை யான கல்வியை மட்டுமே அளிக்கின்றன.

சாரு : படித்து முடித்து வெளியேறும் மாணவனுக்கு உலகத்தைப் பற்றி எதுவுமே தெரிந்திருப்பதில்லை. பாடங்களைத் தவிர, சுயமாக வேறு எதையும் தெரிந்து கொள்ள அவனுக்கு வாய்ப்பு அளிக்கப்படுவ தில்லை. கெமிஸ்ட்ரியும் காமர்ஸும் இன்று போதிக்கப்படும் முறையில் நடை முறை வாழ்க்கைக்கு உதவுமா?



✤ சாருகேசி

வெங் : சமூகம் ஒரு பள்ளிக் கூடத்தை எதைக் கொண்டு மதிப்பிடுகிறது? அது பெறும் 100% ரிசல்ட் அல்லது அது பெறும் ஃபர்ஸ்ட் கிளாஸ்களின் எண்ணிக்கை - இவற்றைக் கொண்டுதான். இத்தகைய கணிப்பு தனிப்பட்ட முறையில் எனக்கு உடன்பாடானது அல்ல. என்றாலும், சமூ கத்தின் இந்தத் தவறான அணுகு முறையே இன்று ஒரு நிர்ணயமான அளவு கோலாகி விட்டது. பள்ளிகளிடையே போட்டிக்கு இடம் அளித்து விட்டது. இப்படிப் பட்ட சூழ்நிலையில் பள்ளி நிர்வாகிகள் அந்த இலக்கை அடைவதற்கான வழிமுறைகளை மேற் கொள்வதைத் தவிர வேறு வழியில் லாமல் போய் விடுகிறது. சமூகத்தின் கணிப்பு எப்படி இருக்க வேண்டும்? ஒரு மாணவனைத் தகுதிவாய்ந்த குடிமகனாக ஒரு பள்ளி உருவாக்குகிறதா என்பதைக் கொண்டுதான் எடையிட வேண்டுமே தவிர, மேற் கல்வி பெறுவதற்கும் வெளி நாடு செல்வதற்கும் ஒரு பாஸ்போர்ட் - விஸாவாக அது அமைகிறதா என்பதை வைத்து அல்ல. அப்படிப்பட்ட ஒரு சூழ் நிலை உருவாகுமானால் கல்வியின் தரத்தை எந்த வகையிலும் குறைத்து விடாமலே மேலும் சிறப்பான மாணவர்களை நம்மால் உருவாக்கமுடியும்.... பள்ளியில் படிக்கும் ஒரு குழந்தையின் தாய் என்கிற முறையில் நீங்கள் எதிர்பார்ப்பது என்ன?

ராதா : நான் படித்த போதும் சரி, இன் றைக்கும் சரி, தகவல்கள் திணிக்கப் படுகின்றனவே தவிர குழந்தைகள் தாமாக, தம்மியல்பாக ஒரு தகவலைத் தெரிந்து கொள்ள வாய்ப்பளிக்கப்படுவது இல்லை. இன்னுமொன்று: ஒரு மாணவனுக்கு இன்று அளிக்கப்படும் கல்வி அவனை ஒரு இண்டிவிஜுவலாக - ஒரு தனிமனிதனாக ஆக்குகிறதே தவிர சமூக நீரோட்டத்தில் அவன் கலந்து இயங்குவதற்குப் பாதை வகுப்பதில்லை.

வெங் : நீங்கள் சொல்வது ஒரு வகை யில் உண்மைதான். என்றாலும் கல்வி முறையை மட்டுமே அதற்குக் காரணமாக்கி விட முடியாது. கூட்டுக் குடும்ப முறை ஏறக்குறைய நசித்துவிட்டது. ஆகவே, நமது பாரம்பரிய உயர்வுகளைக் குழந்

தைக்குச் சொல்லித்தர வீட்டில் பெரிய வர்கள் கிடையாது. பெற்றோர்களுக்கும் அதற்கான நேரம் இருப்பதில்லை. ஆகவே அவற்றையெல்லாம் குழந்தை இயல்பாகப் பெற்றுக் கொள்ள அல்லது கிரகித்துக் கொள்ள வாய்ப்பில்லாமல் போய் விடு கிறது என்பது நடை முறை உண்மை. தவிர, போட்டி நிறைந்த உலகில் வாழ வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் போது, அடிப் படையான தார்மீக, பண்பாட்டு உயர்வுகளி லிருந்து விலகிப் போகும் மனநிலையை அவன் பெற்றுவிட நேர்ந்து விடுகிறது. கல்வியாளர்களும் பெற்றோரும் கலந்து பேசி ஒரு இணக்கமான விடை காண்பது ஒன்றுதான் இதற்கு வழி.

ராதா : பொதுவாக, குழந்தையை அதன் இரண்டரை அல்லது மூன்றாவது வயதில் பள்ளியில் சேர்க்கிறோம். முதல் முதலாகக் காலடி எடுத்து வைக்கும் அந்தக் கட்டத்திலேயே அதற்கு ஒரு இன்டர்வியூ தேவைதானா?

கனிதா : தேவையில்லை என்பதுதான் என் கருத்து.

சாரு : இன்டர்வியூ என்று வைப்பதும், அதில் ரைம்ஸ் சொல்லச் சொல்வதும், அது சொல்வதைப் பொறுத்துப் பள்ளிக் கூடத் தில் சேர்த்துக் கொள்வதும் தேவை யற்ற போட்டி அல்லது பொறாமை மனப்பான் மையை அந்த இளம் வயதிலேயே வேரூன்றச் செய்து விடும் என்பது என் கருத்து.

வெங் : இன்டர்வியூ என்பதே குழந்தை எந்த அளவுக்குப் பேசும் திறன் பெற்றிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளத்தான். இந்த இன்டர்வியூ இன்று ஒரு பெரும் பிரச்னையாக உருவாகியிருப்பதற்கு ஒரே காரணம் - தேவையைப் பூர்த்தி செய்யும் அளவுக்கு இடம் இல்லாமல் இருப்பதுதான். 80 இடங் களே உள்ள பள்ளிக்கு 230 பேர் விண்ணப் பித்தால் என்ன செய்வது?



ராதா : பேசும் திறனைத் தெரிந்து கொள்வதற்குத்தான் இன்டர்வியூ என்கி றீர்கள். ஒரு நல்ல புத்திசாலிக் குழந்தை தன்னை இன்டர்வியூ செய்கிறவர் முன்பின் தெரியாதவர், தனக்குப் பழக்கமில்லாதவர் என்கிற ஒரு காரணத்தாலேயே பேசவோ அல்லது பதில் சொல்லவோ தயங்கினால் அதற்காக அது ஒரு நல்ல பள்ளியில் சேரக் கூடிய வாய்ப்பை இழந்து விட வேண்டுமா? இன்னும் ஒன்று. அதிபுத்தி சாலியாக இல்லாத, சராசரி அல்லது அதற்குச் சற்றுக் குறைவான அறிவுள்ள குழந்தைக்கு நல்ல பள்ளிகளில் இடம் கிடைப்பதில்லை. அதன் வருங்காலம் என்ன ஆவது? எல்லாக் குழந்தைகளுக் குமே நல்ல கல்வி கிடைப்பதற்கு என்ன வழி?

வெங் : இப்போதுள்ள அமைப்பில் நர்சரியிலிருந்து ப்ளஸ் டூ வரையில் ஒரே பள்ளியில் இடம்பெறுகின்றன. அப்படி யின்றி, ப்ரீஸ்கூல் வகுப்புக்களைத் தனியே பிரித்துப் பேட்டைக்குப் பத்து - இருபது நர்ஸரிப் பள்ளிகளைத் தொடங்கினால்தான் எல்லாக் குழந்தைகளுக்குமே இடம் கிடைக்கும். இப்போதுள்ள முறையே நீடிக்கும் போது இடப் பிரச்னை தவிர்க்க முடியாதது.

ராதா : அடுத்த பிரச்னை அளவுக்கு மீறின புத்தகங்களும் நோட்டுப் புத்தகங் களும். அத்தனை சுமையும் அவசியம் தானா? அவற்றைக் குறைப்பதற்கோ அல் லது தவிர்ப்பதற்கோ வழி இல்லையா?

சங்கர் : புத்தகங்களையும் நோட்டு களையும் சுமந்து செல்வது பழக்கப்பட்டு விட்டது. உண்மையில் ஒரு போர்ட்டரைப் போலத்தான் சுமந்து செல்ல வேண்டி யிருக்கிறது. என்றாலும் இன்றையக் கல்வி முறைக்கு அவை தேவையானவையாகத் தான் இருக்கின்றன.

சாரு : குறைந்த பட்சம் எல்கேஜி, யூகேஜி குழந்தைகளின் பளுவைக் குறைப்ப தற்காவது வழி தேடலாம். அந்த வயதில் வெறும் வாய்மொழிக் கல்வி போதாதா? பள்ளியிலும் பாடம் எழுத வேண்டும். வீட்டுக்கு வந்ததும் அம்மா வேறு அதையே செய்யச் சொல்கிறாள்! அந்த வயதில் ஒரு குழந்தை எவ்வளவுதான் தாங்கும்?

கனிதா : பொதுவாக ஒரு குழந் தைக்குப் பாடப்புத்தகம் என்று எதுவும் தேவையில்லை என்று நினைக்கிறேன். பாடங்களை விளக்கிச் சொல்வதற்குத்தான் ஆசிரியர் இருக்கிறாரே! அதைப் புரிந்து கொண்டாலே போதும். அப்புறம் ஒன்று. எழுதுவதற்கு இத்தனை நோட்டுகள் எதற்கு? எழுதிக் கொண்டு வந்தால் டிக் போட்டு, குட். இல்லையென்றால் பனிஷ்



கனிதா

மென்ட்!

வெங் : குழந்தை என்ன படிக்கிறது, எது எதைத் தெரிந்து கொள்கிறது என்பதைப் பெற்றோர் புரிந்து கொள்ள வேண்டும். அதற்குச் சந்தேகம் ஏற்படக் கூடிய இடங்களில் விளக்கமளிக்க வேண்டும். படிக்காத பெற்றோர் இருக்கும் பட்சத்தில் குழந்தையே ஒரு முறை புரட்டிப் பார்த்துத் தெளிவு பெற உதவியாக இருக்க வேண்டும். இந்த நோக்கங்களையே பாடப் புத்தகங்கள் நிறைவேற்றுகின்றன. அத்தனை சுமையையும் எடுத்து வரவேண்டுமா என்றால், ஆசிரியரும் மாணவர்களும் கலந்து பேசி அன்றாடத் தேவைக்கேற்ப அதைச் சரி செய்து கொண்டு விட முடியும்.

ராதா : பத்து முதல் பன்னிரண்டு வகுப்பு வரை படிக்கும் மாணவர்களை எடுத்துக் கொள்வோம். பாடச் சுமையைத் தவிர அவர்களுக்கு வேறு என்ன வாய்ப்பு இருக்கிறது? கலந்து பேச, விவாதிக்க, அதன் மூலம் தீர்த்துக் கொள்ள வேண்டிய சிறு சிறு பிரச்னைகள் இருக்கலாம். குறைந்த பட்சம், பாடங்களை மறந்து கலந்துரையாடி, தொடர்புகளை வலுப்படுத்திக் கொள்ளவாவது சந்தர்ப்பம் அளிக்கப்படுகிறதா?

வெங் : நிச்சயமாக. என் பள்ளியைப் பொறுத்த வரையில், சனிக்கிழமை முற்பகல் அதற்கென்றுதான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் பாட்டு, நாடகப் பயிற்சி, பேச்சுப் போட்டி என்று விருப்பமான நடவடிக்கைகளில் ஈடுபடலாம்.

சங்கர் : இத்தகைய நடவடிக்கைகளில் எல்லாருக்குமே ஈடுபாடு இருக்கும் என்று சொல்ல முடியாது. எனக்கு விருப்பமில்லாததில் நான் ஈடுபட வேண்டும் என்று எதிர்பார்ப்பது கூடாது. அதற்குப் பதில் இந்த நேரத்தில் அவர்களைச் சுதந்திரமாக விட்டு விடலாம்.

கனிதா : எனக்குப் பிரியமான பொழுது போக்கு இசை கேட்பது, புத்தகம் படிப்பது. தவிர, வாரத்தில் ஒருநாள், கடந்த வாரத்தில் நான் என்னவெல்லாம் செய்தேன் என்று சிந்திப்பது. இந்தப் பன்னிரண்டு வருடங்களில் நான் என்ன செய்தேன்? படித்தேன், படித்தேன், படித்தேன்... அவ்வளவுதான்! அதற்கு மேல் வேறு எதுவுமே செய்ய எனக்கு வாய்ப்பு அளிக்கப்படவில்லை.

சாரு : மாணவர்கள் தங்கள் மனங்களில் என்ன இருக்கிறது என்பதை வெளிப்படுத்த சந்தர்ப்பமே கிடைப்பதில்லை. ஆசிரியரும் பாடப் புத்தகம் தவிர வேறு எதையும் பேசுவதில்லை. அதில் என்ன இருக்கிறது என்பதைப் படித்துத் தெரிந்து கொண்டு விடலாம். ஏன் அவ்வாறு இருக்கிறது என்பதைத் தான் அவர்கள் சொல்ல வேண்டும். ஆனால் சொல்வதில்லை. ஆசிரியர் எதிரே இருப்பதே ஒரு வகை மனப்பாதிப்பை ஏற்படுத்தி விடுகிறது. ஆகவே, வகுப்புக்கு வெளியே ஆசிரியரைச் சந்தித்தாலும் மனம் திறந்து பேச முடிவதில்லை. பள்ளி, பெற்றோர், ஆசிரியர் அனைவருடைய அணுகுமுறையுமே ஓர் இலக்கை நிர்ணயித்துக் கொண்டு மாணவர்கள் அதை எட்ட வேண்டும் என்று எதிர்பார்ப்பதாகத்தான் இருக்கிறது. அதனால் மாணவர்களின் சுயத் தன்மை அடிபட்டுப் போய் விடுகிறது.

சங்கர் : வகுப்பறையில் ஆசிரியராக இருப்பது சரி. வெளியே அதை மறந்து விட்டு மாணவர்கள் மத்தியில் சகஜமாகப் பழக வேண்டும். அப்போதுதான் அவர்களுடைய பயங்களை, பிரச்னைகளைப் புரிந்து கொண்டு சரிப்படுத்த இயலும்.

வெங் : ஆக, மாணவர்களுக்கு நிறைய ஸ்ட்ரெஸ் இருக்கிறது என்பது தெரிகிறது. ஸ்டாண்டர்ட் நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்னும் போது, அதை நிர்ணயித்திருப்பது யார் என்பதைச் சொல்வதற்கில்லை.

ராதா : அப்படியில்லை. பெற்றோரும் கல்வியாளர்களும் தாம் அதைச் செய்திருக்கிறார்கள். குழந்தைகள் அனைவருமே ஒவ்வொரு நாளையும் எதிர் காலத்தைப் பலப்படுத்துவதற்காக மட்டுமே செலவிடுகிறார்களே தவிர, அன்றைய தினத்துக்காக, மகிழ்ச்சிக்காக எதையுமே செய்வதில்லை. குழந்தைகள் குழந்தைகளாக இயங்குவது அடிப்படைத் தேவை. அதை இந்தக் கல்வி முறை புறக்கணிக்கிறது. இந்த அணுகு முறை மாற வேண்டும்.

வெங் : இதற்கெல்லாம் ஒரே ஒரு விடைதான் இருக்கிறது. பாடத்திட்டங்கள், அணுகுமுறை, இந்தக் கல்வி அமைப்பு எல்லாவற்றிலுமே வளைந்து கொடுக்காத, இறுக்கமான கட்டுப்பாடு காணப்படுகிறது. அதைத் தளர்த்திவிட்டால் இந்தப் பிரச்னைகளுக்கு விடை காணமுடியும்.

- சி. ஆர். கே.

புகைப்படங்கள் : ரமணன்.

# திறந்த வெளியில் விஞ்ஞானம்



◆ ஆப்பிள்களை நறுக்கி...



◆ எருக்குவியலில் ஆராய்ச்சி...



◆ ஆப்பிள் சாறு தயாரித்தல்



◆ தோட்டத்துக்குத் தண்ணீர் விட விரையும் சிறுவன்



கலிஃபோர்னியா பள்ளி ஒன்றில் 'Life Lab' என்ற திட்டத்தில் பயிலும் மாணவர்களை இங்கே காண்கிறீர்கள். இவர்கள் தோட்ட வேலை செய்தவண்ணம் விஞ்ஞான உண்மைகளை நடைமுறையில் தெரிந்து கொள்கிறார்கள்... தங்கள் ஒவ்வொரு செயலும் சுற்றுப்புறச் சூழலில் ஏற்படுத்தும் மாற்றங்களை ஆராய்ந்து அறிவது இம்மாணவர்களுடைய பாடத் திட்டத்தின் முக்கிய அம்சம்.

விஞ்ஞான உண்மைகளைப் பாட நூல்களிலும் ஆய்வுக் கூடங்களிலும் மட்டும் தேடாமல் இப்படி நடைமுறையில் கற்பது எவ்வளவு சுவாரஸ்யமானது, உற்சாகமானது என்று இப்படங்கள் உணர்த்துகின்றன.

படங்கள் : ஜார்ஜ் ஆல்ஸன்

நன்றி : ஸ்பான்

✦ சுவாரஸ்யமான ஆராய்ச்சியில்... ஆசிரியருடன்...




✦ 'இவை நாங்கள் பயிரிட்ட பரங்கிக் காய்கள்!'

✦ செடி போடுவதற்கு நிலம் தயாராக்கப்படுகிறது...



"அம்மா, நான் வெளில போயிட்டு வர்றேன்..." மீரா குரல் கொடுக்க - ராஜேஸ்வரி புன்முறுவலுடன் வாசல் வரையில் வந்து அவளை வழியனுப்பி வைக்கிறாள்.

"பத்திரம்மா. வெய்யில்லே ரொம்ப அலையாதே. ஞானம்!"

அவள் கூப்பிட்ட குரலுக்கு ஆட்டோ டிரைவர், மீராவை முதன் முதலாய் இந்த வீட்டுக்கு அழைத்து வந்த அதே ஆட்டோ டிரைவர் ஞானப் பிரகாசம் - கை கட்டி வந்து நிற்கிறான்.

"இதப் பாரு ஞானம்... உன்னை நம்பித்தான் அனுப்பறேன். சாயந்திரம் அஞ்சு மணியாச்சுன்னா - வண்டி வீட்டு வாசல்லே இருக்கணும். என் வீட்டுல அடைக்கலம் கொடுத்திருக்கிறவரைக்கும் - இவளைப் பத்திரமாப் பார்த்துக்க வேண்டியது என் கடமை."

"சரிதாங்க. தலைவர் கேட்டா என்ன சொல்லட்டும்?"

"யாரு, குமரன் கேட்டாலா...? 'எனக்கு ஒரு விஷயமும் தெரியாதுங்க. அம்மா கூப்பிட்டனுப்பினாங்க; போனேன். 'பொறுப்பாப் பார்த்துக்கடா ஞானம்'னு சொன்னாங்க. அதும்படியே செய்யறேன். எதானாலும் அம்மாகிட்ட கேளுங்க,'ன்னு சொல்லு. என்னை வந்து கேட்கட்டும்; நான் பேசிக்கறேன்..."

மீராவுக்கு ராஜேஸ்வரியைப் பிடித்துப் போய் விட்டது. முதல் பார்வையிலேயே மனிதர்களுடன் ஒட்டிக் கொள்ளும் அவளின் சுபாவம்; மகனின் வார்த்தைகளை மீறி, மீராவைத் தன்னுடன் தங்க வைத்துக் கொண்ட அவளின் துணிச்சல்... எல்லாவற்றையும் விட - அன்றைக்கு பஸ்ஸில் என்ன நடந்தது என்பதை மீரா எத்தனை முறை கூறினாலும் அலுக்காமல் கேட்கும் அவளது பொறுமை...

குமரன், இவள் நிற்கும் பக்கம் திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை. இவளைத் தன் வீட்டில் தங்க வைத்ததற்காக, அம்மாவிடம் நாலைந்து நாட்கள் முகம் கொடுத்துப் பேசக் கூட இல்லை.

எந்த ஒரு விஷயத்திலும் மகனின் விருப்பத்துக்கு எதிராக எதுவும் செய்யாத ராஜேஸ்வரி, மீராவின் விஷயத்தில் மட்டும் எப்படி - இப்படியொரு சுதந்திரமான முடிவெடுத்தாள் என்பதுதான் வீட்டில் உள்ள வேலைக்காரர்களுக்குக் கூடப் புரியாத புதிராய்....

இதை ஒரு நாள் குமரனே, தாயிடம் வாய் விட்டுச் சொல்லியும் கூட அவள் பொருட்படுத்தவே இல்லை.

"ஏண்டா, முருங்கைக்கா சாம்பார் வச்சிருக்கேன். உனக்கு சிக்கன் வறுத்து வைக்கட்டுமா?"

"ஆமா... இதுக்கெல்லாம் வந்து என்கிட்டே அபிப்பிராயம் கேளு. எதுக்குக் கேட்கணுமோ அதுக்குக் கேட்காதே!"

"குமரு, நீ எதைப் பத்திச் சொல்லுறன்னு எனக்கும் புரியுது. ஏதோ வந்த அன்னிக்கு உன்கிட்ட இடக்கு முடக்காப் பேசினாளே தவிர, நல்ல பொண்ணு. ரொம்ப அனுசரிச்சு நடந்துக்கறது. உனக்கும், எனக்கும் இருக்கற அதே துயரம்தான் அந்தப் பொண்ணுக்கும். என்னால அவளைப் புரிஞ்சுக்க முடியுது. இந்த ஒரு விஷயத்துல மட்டும் அம்மாவை நீ தடுக்காதே!"

இதற்கு மேல் குமரன், அவளிடம் இது பற்றிப் பேசுவதே இல்லை.

ஆனாலும் மீராவை நேருக்கு நேர் சந்திக்கும்படி நேர்ந்து விட்டால், முகம் கருங்கிப் போவான்.

# நேற்றுவரை நந்தவனம் 12



அதுவும், இளவரசு மீராவின் இடுப்பில் சவாரி செய்வதைப் பார்த்தால் எரிச்சலின் உச்சிக்கே போய் விடுவான்.

''டேய், கீழே இறங்குடா!''

''ஏண்டாப்பா, இப்பத்தான் கொஞ்ச நேரம் சோபாவுல வந்து உட்கார்ந்தேன். ஏதோ மீராகிட்டயாவது புள்ள ஒட்டிக்கறா னேன்னு நான் சந்தோஷப்படறேன். நீ எதுக்கு அவனை இறங்கச் சொல்றே? இதோ பத்து நிமிஷத்துல நீ மோட்டார் சைக்கிளை உதைச்சு, புருபுருன்னு கிளம்பி டுவே... இவ இருக்கறது எனக்கு எத்தனை ஒத்தாசையா இருக்கு தெரியுமா?''

மீரா பேச மாட்டாள். குமரனை அவள் பார்க்கும் பார்வையிலேயே அலட்சியம் தெறிக்கும். அவன் பல்லைக் கடித்தபடியே நகருவான்.

அவனுடன் பேசுவதில்லையே தவிர அவனைப் பற்றியச் சகலமான விவரங் களையும் மீரா, ராஜேஸ்வரியிடமே கேட்டுத் தெரிந்து கொள்கிறாள்.

''ஏம்மா, உங்க பிள்ளை நிஜமாவே இந்த விபத்துக்குக் காரணம் யாருன்னு தேடறாரா?''

''பின்னே...அது ஒண்ணுதான் இப்ப அவனோட இலட்சியமே...''

''இதுவரைக்கும் யார் மேலயாவது சந்தேகப்பட்டிருக்காரா?''

''அதை ஏன் கேட்கறே? ஒரு லிஸ்ட்டே வச்சிருக்கான். அப்பப்ப சொல்லுவான். நான்தான் இதையெல்லாம் அதிகமாக் காது கொடுத்துக் கேட்கிறதில்லே. மொத்த மாய்ப் பறிகொடுத்தாச்சு. இனிமே குற்ற வாளிகளைக் கண்டுபிடிச்சுத் தண்டனை கொடுக்கறதனாலே மட்டும் போனவங்க திரும்பி வந்திடவாப் போறாங்க?''

''அப்படி விட்டுட முடியுமா? அது சரி, அந்த லிஸ்ட்டுல யார் யார் இருக்காங்கன்னு சொல்லுங்களேன்...''

ராஜேஸ்வரி மிரண்டு விழித்தாள்.

''ஐயோ... எதுக்கு? நான் எதையாவது சொல்லப் போக, நீ, இதான் சாக்குன்னு, இவங்களை எல்லாம் தேடிட்டுக் கிளம்ப, குமரன் காதுக்கு இந்த விவகாரம் போச் சுன்னா அவ்வளவுதான்! வேற வினையே வேண்டாம்!''

இந்த இரண்டு நாட்களில், மீரா - ராஜேஸ்வரியின் சுபாவத்தை நன்கு புரிந்து கொண்டு விட்டாள். அதனால் - அவளை வற்புறுத்தவில்லை. ஒரு சில மணி நேரத் தில் ராஜேஸ்வரியே அவளைத் தேடிக் கொண்டு வந்தாள்.

''இந்தா, நான் உன்னோட நல்ல துக்காகத்தான் சொல்றேன். ரிஷிமூலம் - நதிமூலம் தேடறாப்பல - நீ இந்த வெடி குண்டு விபத்துக்கு மூல காரணம் தேடிப் போய், கடைசியில உன் உசுருக்கு ஏதாவது சேதாரம் வந்துடப் போறதேங்கறதுனால தான் சொல்றேன். அதுக்காகக் கோவிச் சுக்காதே. நான் சொல்ற பேரை எல்லாம் குறிச்சுக்க....''

அனுராதா ரமணன்



வாசிப்பவர்: சென்ற வாரம் புதன் கிழமை ஒரு தடங்கலும் இல்லாமல் நிகழ்ச்சிகளை ஒளிபரப்பி இருக்கிறதாக ஒரு நேயர் எழுதியிருக்கார்...''

அதிகாரி: ''தவறுதான்... இனிமே இது மாதிரி நடக்காமல் பார்த்துக்கறோம்.''

- வி. கி. குமார்.

மீரா, மிக அவசரமாய்ப் பேனாவை எடுத்தாள்.

''உங்களுக்கு ரொம்ப நல்ல மனசு...''

''இருந்து என்ன பிரயோசனம்? அப்பனும் சரி, பிள்ளையும் சரி, என்னைப் புரிஞ்சுக்கவே இல்லையே...''

''சரி... லிஸ்ட் சொல்றீங்களா?''

''என்ன லிஸ்ட்?''

மீரா அவளைப் பார்த்து முறைக்க, அவள் சிரித்தபடியே சொல்கிறாள்.

''அம்மாடி... குமரு முதல்லே சந்தேகப்படறது, அவனோட மச்சான் - அதான் தெய்வநாயகியோட தம்பீ... அவன் மேல சந்தேகம்.''

''அதெப்படி, சொந்த அக்காவைப் போய்...'' -

''என்கிட்ட அதெல்லாம் கேட்காதே. ''யார் யார் மேல குமரு தம்பிக்குச் சந்தேகம்னு மட்டும் கேளு; சொல்றேன். ஏன், எப்படின்னு கேட்டா - நான் என்ன இட்சிணியா?''

''சரி சொல்லுங்க. உங்க மருமகளோட தம்பி பேரென்ன?''

''ரவி. பொல்லாதவன். ஒரு நாளு எங்க வீட்டுக்காரரைச் சுடத் துப்பாக்கிய மடியில கட்டிட்டு வந்துட்டான்னா பார்த்துக்க..''

''உங்க வீட்டுக்காரர் மேல அவனுக்கு என்ன கோபம்?''

''நல்லாக் கேட்டியே? அவனோட அக்கா தெய்வநாயகிய - என் வீட்டுக்காரரு - அதான் எக்ஸ். எம். எல். ஏ. கை நீட்டி அடிச்சா...? கூடப் பொறந்த பொறப்பு சிலுத்துட்டு வராதா? வந்துட்டான் துப்பாக்கியோட.''

மீரா சிரிப்பை அடக்க மாட்டாமல் தவித்துக் கொண்டே கேட்டாள்:

''அப்படி அக்கா மேல அத்தனைக் கரிசனம் இருக்கற தம்பி, அக்கா போற பஸ்ஸில பாம் வைப்பானா?''

''இங்கேதான் நீ தப்பு பண்ணறே. பதவி ஆசையும், பண ஆசையும் என்ன வேணுமானாலும் பண்ணச் சொல்லும். இங்கே, அவன் துப்பாக்கியோட வந்தப்ப அவனிருந்த நிலை வேற. டைவர்ஸ் ஆனதுக்கு அப்புறம் - எப்ப தெய்வா பிறந்த வீட்டுக்குப் போனாளோ - அப்பவே அவ அப்பா, தன்னோட சொத்துல முக்கால் வாசியை வாழாவெட்டியா வந்து நின்ன தன் பொண்ணு பேருக்கே எழுதி வச்சிட்டாரு. நர்ஸிங் ஹோம் கட்டறதுக்கு வேற - ஏகமாச் செலவழிச்சிருக்காரு. இதெல்லாம் பையனுக்குப் பிடிக்கலே. அடிக்கடி, அக்காகிட்ட, 'குமரு ரொம்ப நல்லவன்; அவனைப் பகைச்சிட்டு வந்தது தப்பு'ன்னு சொல்லி, கடுப்படிச்சிருக்கான். இவ மசியலை. இப்ப தீர்த்துட்டான். ஒரே கல்லுல ரெண்டு மாங்கா அடிச்சிட்டான். ஜென்ம விரோதியான அக்கா மாமனாரையும் தீர்த்தாச்சு. சொத்துக்கு இடைஞ்சலா இருந்த அக்காவையும்...''

''இப்ப அந்த சொத்தை எல்லாம் யார் கவனிச்சுக்கறாங்க?''

''வேற யாரு? இந்தப் பிள்ளை ரவிதான். அக்கா குழந்தை இளவரசு மேஜராகற வரைக்கும், இத்தனைச் சொத்துக்கும் கார்டியன் தான்தான்னு வக்கீல் வைச்சு கோர்ட்டுல கேஸ் நடத்திட்டிருக்கான். நம்ம குமரன் அதுக்கெல்லாம் சளைச்சவனில்லே. அவன், சொத்துல சல்லிக் காசு கூட வேண்டாம். சட்டப்படி என் குழந்தை என்கிட்ட வளர வேண்டியதுங்கறான். கோர்ட்டுல, 'குழந்தையோட ஆறு வயசு வரைக்கும் அம்மா பாதுகாப்புலேயும், அதுக்கப்புறம் அப்பாவோட பராமரிப்புலேயும் இருக்க வேண்டியது'ன்னு எப்பவோ தீர்ப்பாயிடுச்சு. அம்மா இறந்தா பின்னை, அப்பன்கிட்ட வர வேண்டியது தானே நியாயம்?''

ராஜேஸ்வரிக்கு இதைச் சொல்லும் போதே முகம் சிவந்து, மூச்சு வாங்குகிறது.

மீராதான் அவளைச் சமாதானப்படுத்துகிறாள்.

''விடுங்கம்மா. இந்த அநியாயத்தை யார் செஞ்சிருந்தாலும் - கடவுள் அவங்களுக்குச் சரியான தண்டனை கொடுப்பாரு. அடுத்தாப்பல லிஸ்டுல யாரு?''

''அது ஒண்ணும் சரியாத் தெரியலை மீரா. எங்க வீட்டுக்காரருக்குச் சின்ன வீடுங்க நிறைய இருக்கு. இப்ப புதுசா ஒருத்தி வந்து சேர்ந்திருக்கா. அவளாலே தான் வீட்டுல தெய்வநாயகிக்கும் இவருக்கும் சண்டை ரசாபாசமாப் போயிடுச்சு.

அந்தப் பொண்ணு பேரு நிர்மலா. அவ ளுக்கு வயித்துல மூணு மாசம். அதைக் கலைக்கணும்னு தெய்வநாயகிய - மருந்துப் பெட்டிய எடுத்திட்டு, அவரோட கிளம்பி வரச் சொன்னாரு. முடியாதுன்னு சொல் லிட்டா. அந்தப் பொண்ணும் நேரும் கூறுமா இருக்கற ரகமில்லேன்னு வைச் சுக்கயேன். எப்பப் பாரு நகை, பணம்னு பிடுங்கிக்கிட்டே இருக்கும். இவருக்கே எப் படியாவது கழண்டு வந்தால் போதும்ன்னு ஆயிடுச்சு... அந்தப் பொண்ணு எப்பவும் போன் செஞ்சு, இவரை மிரட்டும்... 'என் வயித்தெரிச்சல் சும்மாப் போகாது; எல்லாத் துக்கும் சேர்த்து வச்சு அனுபவிக்கப் போறீங்கன்னு, சாபம் கொடுக்கற மாதிரி கத்தும்... இது அவ வேலையாவும் இருக்க லாம்...''

''ம்... அப்புறம்?''

''அன்னிக்கு பஸ்லே யாரோ சினிமாக் காரப் பொம்பளையோட குழந்தைய எடுத் திட்டு, அவ தங்கச்சி ஏறினாளாமே. பாமாவோ என்னமோ பேரு சொன்னான் குமரன். அந்தப் பொண்ணுக்கு வேண்டாத வங்க கூட இதை செஞ்சிருக்கலாம்னு... ஒண்ணும் நிச்சயமாச் சொல்றதுக் கில்லே...''

இப்போதைக்கு இது போதும் என்று நினைத்து விட்டாளோ என்னவோ... மீரா, மூன்று துண்டுக் காகிதங்களில் ரவி, நிர்மலா, பாமா என்று எழுதிச் சுருட்டிக் குலுக்கிப் போட்டாள்.

இளவரசுவை அழைத்து, அதில் ஒன்றை எடுத்துத் தரச் சொன்னாள். பிரித் தாள்.

'நிர்மலா.'

''சரிதான்... தாத்தாவுக்கேத்த பேத்திடா...''

மீரா, குழந்தையின் கன்னத்தில் செல்ல மாய்த் தட்டி விட்டுக் கிளம்பி விட்டாள்.

''தெரியாத ஊரு. கண்டபடி அலை யாதே. நான் வண்டி பார்த்து ஏற்பாடு செய்யறேன். அதுலேயே போயிட்டு அது லேயே வந்து சேரு..''

ராஜேஸ்வரிதான் ஆட்டோ டிரைவர் ஞானப்பிரகாசத்தை அழைத்து, பொறுப்பை ஒப்படைத்தது.

''எங்கேம்மா போகணும்?''

''கமலா தியேட்டர் பக்கம்பா... ஆபிர ஹாம் வைத்தியர் தெரு...''

கமலா தியேட்டருக்கு இந்தப் பக்கம் - பர்மா பஜார் போல வெளிநாட்டுப் பொருட்கள் நிரம்பிய கடைகள்.. அங்கு ஈயாய் மொய்க்கும் கூட்டம்.

மீரா, தெரு முனையிலேயே வண்டி யை நிறுத்தி இறங்குகிறாள்.

''ஞானம், நான் இப்படியே நடந்து ஒவ்வொரு வீடாப் பார்த்துட்டே போறேன். நீங்க இங்கேயே இருங்க...''

''ஜாக்கிரதைம்மா... ஏதாச்சும் விவகா ரம்னா, அம்மா என்னைத்தான் திட்டு வாங்க...''

''கவலையே வேண்டாம்.''

மீரா, திரும்ப, அவளது கரத்தை ஓர் இளம் பெண் கெட்டியாய்ப் பிடிக்கிறாள்.

''நீங்க... மீராதானே?''

மீரா எதிரில் நின்றவளை உற்றுப் பார்க் கிறாள். 'சட்'டென அடையாளம் தெரிய வில்லை.

''என்னை ஞாபகமிருக்காது உங்க ளுக்கு. கல்யாண களேபரத்துல எப்படி நினைவு வச்சுக்க முடியும்? நான் நாகு மாமா பொண்ணு மங்களா. அதாவது கீர்த்தியோட மாமா பொண்ணு.. எனக்கும் கீர்த்திக்கும்தான் முதல்லே கல்யாணம்



மனைவி: ''பக்கத்து வீட்டுக்கு ஏன் நீங்க மளிகை சாமான் வாங்கிப் போடுறீங்க?''

கணவன்: ''அவங்ககிட்டேருந்து அவ்வப்போது கரண்டியில கைமாத்தா வாங்கினதையெல்லாம் திருப்பித் தர வேண்டாமா?''

- வி. கி. குமார்

நிச்சயம் செய்யறதா இருந்து...''

''ஓ...!''

மீரா, வலிய ஒரு புன்னகையை வர வழைத்துக் கொள்கிறாள்.

அந்தப் பெண், இவளையே பரிவுடன் பார்க்கிறாள்.

''வாங்களேன். வீடு இங்கேதான்..''

''பரவாயில்லே.. நான், இப்ப வரக் கூடாது. இன்னும் ஒரு வருஷம் ஆகல்லே இல்லையா.. அதான்...''

அவள் திக்கி, திணறிச் சொல்ல மங்களா பிடிவாதமாய் அவளது கரத்தைப் பிடித்திழுக்கிறாள்.

''நீங்க வாங்களேன். வீட்டுத் திண்ணை யிலேயாவது உட்கார்ந்து.. அப்பா கூட வீட்டுலதான் இருக்கார்...''

மீரா, செய்வதறியாமல் திகைத்து, அவ ளையே பின்தொடருகிறாள்.

(தொடரும்)

# கோடை விடுமுறையில் பள்ளிக்கூடம் போகணுமா?



அக்ஷர வித்யா பீடத்தில்.....

கடந்த சில வருடங்களாகச் சென்னையில் நடத்தப்படும் கோடைக்கால வகுப்புகளின் எண்ணிக்கை மெல்ல அதிகரித்து வருகிறது... சுமார் ஒரு மாத காலத்துக்கு நடக்கும் இவ் வகுப்புகளில் பள்ளிப் பாடங்களுக்குப் பதிலாகக் கலைகளும் கைத் தொழில்களும் அட்டவணைப்படி போதிக்கப்படுகின்றன. நாள்தோறும் மூன்று முதல் நான்கு மணி நேரம் வரை வகுப்புகள்.

கடைசித் தேர்வை எழுதி முடித்ததும் நம் முன் விரியும் இரண்டு மாத கால விடுமுறை சுதந்திரத்துக்காகக் காத்திருந்து அதன் ஒவ்வொரு நிமிடத்தையும் அனுபவித்து மகிழ்ந்த கடந்த தலைமுறையினருக்குக் கோடைப் பள்ளிகள் பற்றிச் சில நியாயமான சந்தேகங்கள் எழுகின்றன.

★ உடலும் மனமும் இலேசாகி, வீட்டுத் தோட்டத்தில் மாமரத்தையும் பட்டாம்பூச்சிகளையும் ரசித்த அனுபவம்;

★ அத்தை வீட்டிலும் பாட்டி வீட்டிலும் வாரக் கணக்கில் தங்கி உறவுக் குழந்தைகளுடன் விளையாடி மகிழ்ந்த அனுபவம்;

★ தினம் ஒரு புதிய எழுத்தாளருக்கு அறிமுகமாகி புத்தகங்களும் புதினங்களும் தரக்கூடிய ஒப்பற்ற இன்பத்தைத் துய்த்த அனுபவம்;

★ அம்மாவுக்கும் பாட்டிக்கும் சின்னச் சின்ன உதவிகள் செய்து அவர்களுடன் எப்போதையும் விட நெருக்கமாகி மகிழ்ந்த அனுபவம்.....

இவ்வளவு அனுபவங்களையும் துறந்து, ஒரு குழந்தை 'சம்மர் ஸ்கூல்' என்ற பெயரில் மீண்டும் அட்டவணைப் பாடத் திட்ட வட்டத்துக்குள் சிக்கிக் கொள்ள வேண்டுமா...?

இத்தகைய சந்தேகத்துக்கு அவசியமில்லை என்பது சம்மர் ஸ்கூல் நடத்துவோரின் வாதம்:

அக்ஷர வித்யா பீட் என்ற அமைப்பின் நிர்வாகி பிரேமா ரங்காச்சாரி கூறுகிறார்:

''சென்ற தலைமுறைக்கு இருந்த பல சௌகரியங்கள் இந்தத் தலைமுறையினருக்குக் கிடையாது. கூட்டுக் குடும்ப அமைப்பு அழிந்து வருகிறது. பெற்றோர் இருவரும் வேலைக்குப் போகிறார்கள். குழந்தைகள், வீட்டில் தனியாக இருக்க முடியாதே! துணையுடன் இருந்தாலும், தோட்டத்துடன் கூடிய தனி வீடுகளுக்குப் பதில் கூண்டு போன்ற பிளாட்டுகளில் குழந்தைகள் அடைபட்டுக் கிடக்க வேண்டியுள்ளது. சுற்றுலாச் செல்வோர் அதிக பட்சம் ஒரு வாரம்தான் செல்ல முடியும். விலைவாசிகள் அப்படி! இதே காரணத்துக்காக உறவுக்காரர்கள் வீட்டில் போய்த் தங்குவது பற்றி இருமுறை யோசிக்க வேண்டிய நிலை. வாழ்க்கை முறைகள் மாறி விட்டதால் ஏற்பட்டுள்ள ஒரு புதிய

தேவையை 'சம்மர் ஸ்கூல்கள்' பூர்த்தி செய்கின்றன.''

''நான் வீட்டில் ஒரே பிள்ளை. அப்பா, அம்மா இருவரும் வேலைக்குப் போகிறார்கள். என் உறவுக்காரப் பையன் மூலம் கேள்விப்பட்டு விரும்பி இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன்'' என்று மாணவன் பரத் கூறியது பிரேமாவின் கருத்துக்குச் சான்றாக அமைந்தது.

''எங்கள் வகுப்புகளில் ஐந்து முதல் பதினைந்து வயது வரையிலான குழந்தைகள் படிக்கின்றனர். கைத்தொழில், ஓவியம், களிமண் பொம்மை செய்தல், நடனம், கிராமியப் பாடல்கள், நடிப்பு போன்றவை சொல்லித் தருகிறோம். இந்த வகுப்புகளிலெல்லாம் குழந்தைகள் தங்களை முழுமையாக வெளிப்படுத்திக் கொள்ள வாய்ப்புக்கள் கிடைக்கின்றன. எனவே குழந்தைகள் எங்கள் வகுப்புகளை மிகவும் விரும்புகிறார்கள். விடுமுறை நாட்களான சனி ஞாயிறில் கூட எங்கள் பள்ளிக்கு வர ஆசைப்படுகிறார்கள்!'' என்றார் பிரேமா.

**வி**த்யா நிகேதன் என்ற பெயரில் சம்மர் ஸ்கூல் நடத்தும் சுசீலா ஜெயச்சந்திரன், ''வழக்கமான பாடத் திட்டங்கள் அல்லாமல் வித்தியாசமான வேறு கலைகளிலும் விளையாட்டுகளிலும் ஈடுபடும் வாய்ப்பையும் சுதந்திரத்தையும் நாங்கள் குழந்தைகளுக்குத் தருகிறோம்'' என்கிறார். ''சம்மர் ஸ்கூலுக்கு வரும் குழந்தைகளுக்குச் சான்றிதழ் அளிக்கிறோம். ஆனால் போட்டிகள்



◆ வகுப்பறைகளுக்குள்ளேயே வனம்...

கிடையாது. வகுப்புகள் முடிந்ததும் ஒவ்வொரு குழந்தையும் உருவாக்கிய கலை வண்ணங்களைக் கண்காட்சியாக வைக்கிறோம். இதனால் எல்லா குழந்தைகளும் ஆர்வத்துடன் செயல்படுகிறார்கள். ஜப்பானிய முறையில் காகிதப் பொம்மைகள் செய்தல், ஓவியம் வரைதல், டெர்ரகோடா என்ற வகை களிமண் கலைப் பொருள்கள் தயாரித்தல்... இவை கற்பிக்கப்படுகின்றன. யோகாசனப் பயிற்சியும் உண்டு...''

ஒரு மாத காலத்தில் இவ்வளவு வகையான கலைகளைச் சொல்லித் தர முயன்றால் குழந்தைகள் எதையுமே சரியாகக் கற்றுக் கொள்ள முடியாதல்லவா...?

நமது இந்தச் சந்தேகத்துக்குப் பதில் கூறும் முகமாக, சுசீலா ஜெயச்சந்திரன்

◆ சி.பி. ஆர்ட்ஸ் சென்டரில்....

சொன்னார்:

''ஒரு மாதத்துக்குள் குழந்தைகளைக் கலைஞர்களாகத் தேர்ச்சி பெறச் செய்ய முடியாது; ஆனால் கலைகளில் ஆர்வத்தை ஏற்படுத்த முடியும். அவர்களுக்கு எந்தக் கலையில் ஈடுபாடும் திறமையும் அதிகம் என்பதைப் பெற்றோர்கள் உணர்ந்து அதில் அவர்களை மேலும் ஊக்குவிக்க முடியும்.''

**சி.** பி. ஆர்ட்ஸ் சென்டர் நடத்தும் சம்மர் ஸ்கூலின் சூழ்நிலையும் அணுகு முறையும் சற்றே வித்தியாசமாக இருக்கிறது.

வகுப்புகள் திறந்தவெளியில் மரத்தடியில் நடத்தப்படுகின்றன. வகுப்புகள் சுமார் ஒன்றரை மாதங்களுக்கு உண்டு. இயற்கையின் அற்புதம்; தொழில்துறை மற்றும் விலங்குகள். மானுடக் கழிவுகளால் இயற்கை மாசுபடுதல் போன்ற விஷயங்களைப் புதுவிதமான விளையாட்டுக்கள், பொம்மலாட்டம், மந்திரக் காட்சி போன்றவை மூலம் விளக்குகிறார்கள். உதாரணமாக, சிகரெட்டின் தீமையை எடுத்துச் சொல்ல ஒரு செயல்முறை விளக்கம்:

பற்றவைக்கப்பட்ட ஒரு சிகரெட்டின் புகை முழுவதையும் ஒரு பாட்டிலுக்குள் செலுத்தி, அதில் கரி படிவதைக் காட்டுகிறார்கள்.

சி. பி. ஆர்ட்ஸ் சென்டரின் நிர்வாகி நந்திதா கிருஷ்ணா. இவர் சார்பில் இவரது உதவியாளர் சாந்தா பேசினார்: விடுமுறையில் அக்கம் பக்கத்துக் குழந்தைகள் சேர்ந்து நாடகம் போட்டும் விளையாடியும் பொழுது போக்குவது போல்தான் இங்கேயும். ஆனால் அந்த விளையாட்டோடு சேர்ந்தே குழந்தைகளின் அறிவு, மற்றும் சிந்தனையின் எல்லைகள் விரிவடைய உதவுகிறோம்.

**ச**ம்மர் ஸ்கூல் கட்டணம் சராசரியாக இருநூறு ரூபாய். தமது பேத்தி ஸ்வேதாவை அழைத்துப் போக ஒரு சம்மர் ஸ்கூலுக்கு வந்திருந்த பாட்டி திருமதி ரமணி கூறினார்: ''இங்கே பணக்கார வீட்டுக் குழந்தைகள் மட்டுமே வருகின்றன. இந்தக் குழந்தைகள் போல் கீழ் மத்தியதர வகுப்புக் குழந்தைகளும் பயன்பெறும் வகையில் குறைந்த கட்டணம் வசூலிக்கப்பட்டால் நன்றாக இருக்கும்.''

– பானுமதி ராமச்சந்திரன்

படங்கள் : உத்ரா

# மலர்கள்

அண்ணாசாலை மகுதி அருகே பஸ் நின்று விட்டது. கொஞ்ச நேரம் புர் புர் என்று உருமிக் கொண்டிருந்து விட்டு புஸ்ஸென்று மூச்சு விட்டு நிசப்தமானது.



பலரைப் போல நானும் ரொம்பப் பிரயத்தனப் பட்டு வெளியே எட்டிப் பார்த்தேன். கொஞ்ச தூரத்தில் அந்தரத்தில் சில அட்டைகள் ஏதேதோ எழுத்துக்களைத் தாங்கியபடி மிதந்து வந்து கொண்டிருந்தன.

எனக்குப் புரிந்தது. ஏதோ ஊர்வலம். ''பொழப்பத்தப் பசங்க'' என்று நினைத்துக் கொண்டேன். திரும்பி நேராக உட்கார்ந்தேன். பஸ் கிளம்புவதாகத் தெரியவில்லை. மீண்டும் உள் மனத்தில் ஆவல் உந்த வெளியே எட்டிப் பார்த்தேன். இப்போது ஊர்வலம், நான் இருந்த பஸ்ஸுக்கு அருகில் வந்தது.

முதலில் அட்டைகளைத்தான் படித்தேன். என் விழிகள் வியப்பில் உயர, அப்ப

பா. ராகவன்




டியே ஜன்னல் வழியாக நான் வெளியே குதித்து விட்டேன். அக்கம்பக்கத்து பஸ், கார்களில் இருந்தவர்கள் எல்லோரும் என்னை 'ஒரு மாதிரி' பார்த்தார்கள். நான் எதையும் கவனிக்காமல் என்பையில் கைவிட்டு, கேமராவை எடுத்து ஊர்வலத்தைப் பல கோணங்களில் படமெடுத்தேன்.

தமிழகத்தின் முன்னணி நாளேடு ஒன்றின் நிருபன் நான். எத்தனையோ ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாத ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள் பற்றியெல்லாம் எழுதி, பத்திரிகையின், ஆறாவது, ஏழாவது பக்கத்தில் காலியாயிருக்கும் 'காலங்களை' நிரப்பித் தள்ளுவேன். அவற்றில் 'இது'வும் ஒன்று என்று முதலில் நினைத்ததற்கு நறுக்கென்று மண்டையில் குட்டிக் கொண்டேன்.

இது சாதாரணமான ஊர்வலமல்ல. உலகையே உலுக்கக் கூடிய கேள்விகளை எழுப்பும் ஊர்வலம்; பேரணி! நான் மீண்டும் அந்த அட்டை வாசகங்களைப் பார்த்தேன்.

''வாங்காதே! வாங்காதே!
சிறுவர்களை வேலை வாங்காதே!''

''சோர்வு எங்களுக்கு, சுகம் உங்களுக்கா?''

''முறையான கல்வி கொடு!
முடியாட்டா தள்ளி நில்லு!''

இன்னும் பல வாசகங்கள். அனல் பறக்கும் அறிக்கைகள். அட்டைகளைக் கையில் பிடித்துக் கொண்டு, கொளுத்தும் வெயிலில் காலில் செருப்பு கூட இல்லாமல் சிறுவர் ஊர்வலம்.

பள்ளியில் சென்று கல்வி பயில வேண்டிய வயதில் வேலை செய்து சம்பாதிக்கும் குழந்தைத் தொழிலாளர்களின் அந்த ஊர்வலம் என் நெஞ்சை உலுக்கியது. நான் மேலும் நெருங்கி அவர்களைப் புகைப்படமெடுத்தேன். பல சிறுவர்கள் அவசரமாக முகத்தைச் சட்டையால் துடைத்துக் கொண்டு, செயற்கையாகச் சிரித்து, 'போஸ்' கொடுத்தார்கள்.

ஊர்வலம் என்னைக் கடந்து சென்றது. அதிகம் போனால் இருநூறு சிறுவர்கள். சுற்றிலும் ஐந்தாறு இளைஞர்கள். இரண்டு மூன்று இளைஞிகள். பத்து போலீஸ்காரர்கள். எனக்குத் தெரிந்த ஒரு போலீஸ்காரர் எனக்கு குட்மார்னிங் கூட வைத்தார். அதுதான் சாக்கு என்று நான் அவரிடம் போய், ''வேறு பிரஸ்காரங்க வரல்லியா சார்!'' என்றேன்.

''இல்லீங்க....'' என்றார் அவர். நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். குழந்தைகளின் எதிர்காலத்தை உருக்குலைத்து அவர்களை வேலை வாங்கும் வர்க்கத்தை எதிர்த்துக் கடுமையாக எழுத முடிவு செய்தேன்.

ஊர்வலம் கடந்து வழி விட்டதும் பஸ் என்னைக் கடந்தது. தண்டம் அழுத எழு பத்தஞ்சு காசு எங்கிருந்தோ என்னைப் பார்த்துச் சிரிப்பது மாதிரி இருந்தது. போனால் போகட்டும்!

நான் போலீஸ்காரரிடம் அனுமதி வாங்கிக் கொண்டு கூட்டத்துள்ளே நுழைந்து ஒரு பையனைப் பேட்டிக்காக வெளியே அழைத்தேன். அருகே கொடி பிடித்திருந்த ஒரு கடா மீசை, ''யோவ்! போய்யா உன் வேலையைப் பாத்துட்டு'' என்று அந்தப் பையனை என்னிடமிருந்து பிடுங்கியபடி, ''மழலைத் தொழிலாளர் ஒற்றுமை...'' என்று தொண்டை கிழியக் கத்தினான். சிலர் கடனே என்று ''ஓங்குக'' என்று தூங்குவது மாதிரி சொன்னார்கள். குழந்தைகள் முகத்தில் பசி தெரிந்தது.

நான் மறுபடி போலீஸ்காரரிடம் சொல்லி, அந்தக் கடாமீசைக் காரரிடம் இருந்து ஒரு சிறுவனை ரொம்பக்

கஷ்டப்பட்டு வெளியே இழுத்து வந்து பிளாட்பாரத்தில் ஏற்றி, தனியாக ஒரு புகைப்படம் எடுத்தேன். பிறகு ரொம்ப கம்பீரமாக,

''தம்பி... நான் பத்திரிகைக்காரன். உன்னைப் பத்தி, உங்க போராட்டத்தைப் பத்தியெல்லாம் சொல்லு... எங்க பத்திரிகைல போடறேன்... உன் போட்டோ கூட போடறேன்....'' என்று உற்சாகப்படுத்தினேன். பையன் என்னை முறைத்தான். நான், ''என்ன?'' என்றேன். ''தாகமா இருக்கு... ஒரு சோடா வாங்கித் தர்றியா?'' என்றான்.

அந்த விளாடி மனிதாபிமானம் என்னுள் பீறிட்டுக் கிளம்ப, என் ஜிப்பா பையில் கைவிட்டுத் துழாவி, கடைசியாக மீந்திருந்த ஒரு ரூபாய்க்கு ஒரு சோடா வாங்கி உடைத்து அவனிடம் நீட்டி 'குடி' என்றேன். பையன் ஒரே மூச்சில் குடித்துவிட்டு என்னைப் பார்த்து 'ஈ', என்று சிரித்தான்.

ஊர்வலம் கொஞ்ச தூரம் போயிருந்தது. பலர் இவனைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி போய்க் கொண்டிருந்தனர். 'சோடா அட்சாண்டா' என்று பேசிக் கொள்வார்கள் போலும்.

நான். அவன் நேரத்தை வீணாக்குவதாக உணர்ந்தேன். என் ஜோல்னாப் பையிலிருந்து ஒரு ஷார்ட்ஹேண்ட் நோட்புக்கும், பென்சிலும் எடுத்துக் கொண்டு பையனிடம் கேட்டேன்.

''தம்பீ... உங்க போராட்டத்தின் நோக்கம் என்ன?'' அவன் என்னை முறைத்தான்.

''அட போய்யா...! எட்டவரு வேலை செஞ்சா பன்னண்டு ரூவா கூலி குடுக்கறான். வாங்கிக்குனு போய் ஊட்ல குடுத்தா ஒரு வேளை சோறாவது துன்னலாம். எங்க 'பெரிசு'ங்க சும்மா இருக்க முடியாம எங்களைப் புடிச்சி இளுத்துட்டு வந்து ஊர்வலத்துல சேத்துட்டாங்க... போராட்டமாம், கல்வியாம்... யாருக்கு வோணும்... ஒளுங்கா இன்னிக்கு வேலைக்குப் போயிருந்தா சம்பளமாவது முழுசா கெடைச்சிருக்கும்... இவனுங்களுக்கு அதுவும் பொறுக்கலை.




''ஏதோ இந்த முட்டும் என்னை அவுங்க கட்டேர்ந்து பிரிச்சி இட்டாந்திருக்க... அதுவரைக்கும் ரொம்ப 'தேங்ஸ்ஸு'பா. வேகமாப் போனா மத்யானம் ஒட்டிக்கு போயிடலாம். வரட்டா...?''

அவன் எனக்கு 'டாட்டா' காட்டியபடி ஓடிப் போனான். திரும்பிப் பார்த்ததில் அந்தக் கடாமீசைக்காரன் என்னை நோக்கி வருவது தெரிய அவசரமாக நழுவினேன்.

# சிவகாமியின் சபதம்

## நாற்பதாம் அத்தியாயம்

## வாக்குவாதம்

நள்ளிரவைப் பட்டப் பகலாகச் செய்த பால் நிலவில், படகுகள் வராக நதியைத் தாண்டி அக்கரையை அடைந்தன.

கரை சேரும் வரையில் மாமல்லர் பேசவில்லை: பூர்த்தியடைந்த காதலினால் கனிந்திருந்த அவருடைய உள்ளம் கனவு லோகத்திலேயே சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

யுத்தம் முடிந்த பிறகு, - வாதாபியின் அரக்கர் படையை ஹதம் செய்து அழித்து வெற்றிமாலை சூடிய பிறகு, - காஞ்சியில் தாமும் சிவகாமியும் ஆனந்தமாகக் கழிக்கப் போகும் நாட்களைக் குறித்த மனோராஜ்யத்தில் அவர் ஆழ்ந்திருந்தார். பாலாற்றில் இதுமாதிரியே வெண்மதி தண்ணிலவைப் பொழியும் இரவுகளில் தாமும் சிவகாமியுமாகப் படகிலே ஆனந்தமாய் மிதந்து செல்லப் போகும் நாட்களைப் பற்றி அவர் எண்ணமிட்டார்.

அவர் மனம் அப்போது சிறிதளவும் குறையில்லாமல் நிறைந்திருந்தது. விடை பெற்றுக் கொண்டு புறப்படும் போது சிவகாமி உற்சாகமில்லாமல் ஒரு மாதிரி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றதையும், அதைக் கண்டு தனக்குக் கோபம் வந்ததையும் எண்ணினார். போர்க் களத்துக்குக் கிளம்புகிற பரபரப்பினால் தான் உற்சாகமாயிருப்பது இயல்புதான்; - ஆனால் சிவகாமி அப்படியிருக்க முடியுமா; - தம்மைப் பிரிவதில் அவளுக்கு மனச் சோர்வு உண்டாகாமல் இருக்குமா; அதற்காகத் தமக்குக் கோபம் வந்தது என்ன பைத்தியக்காரத்தனம் என்றெல்லாம் அவர் சிந்தித்தார்.

படகு தடார் என்று கரையில் மோதி நின்றதும், மாமல்லரும் கனவு லோகத்திலிருந்து பூவுலகத்துக்கு வந்தார். கரையில் சற்று தூரத்தில் பறந்து கொண்டிருந்த ரிஷபக் கொடியையும், அதைச் சுற்றிலும் நின்று கொண்டிருந்த பல்லவர் படையையும் பார்த்தார். தம்முடன் வந்த வீரர்களில் மிகப் பெரும்பான்மையோர் அங்கிருப்பதைக் கண்டு அவருக்குக் குதூகலம் உண்டாயிற்று.

சட்டென்று மாமல்லருக்குக் கண்ணபிரான் ஞாபகம் வந்தது. படகிலிருந்து கீழே இறங்கும்போதே, ''தளபதி! கண்ணபிரான், எங்கே? அவன் உங்களுடன் 'வருகிறேன்' என்று சொல்லவில்லையா?'' என்று கேட்டுக் கொண்டே இறங்கினார்.

''சொல்லாமலிருப்பானா? தானும் வருவதாகத்தான் பிடிவாதம் பிடித்தான். நான்தான் இங்கேயே இருந்து குதிரைகளுக்குத் தீனி போட்டுக் கவனிக்கும்படி கட்டளையிட்டேன். ஆறுகாத தூரம் ஒரே மூச்சில் நாம் போக வேண்டும் அல்லவா?'' என்றார் தளபதி பரஞ்சோதி.

இருவரும் பல்லவர் படையருகே சென்ற போது, ''பல்லவ குமாரர் வாழ்க!'', ''வீர மாமல்லர் வாழ்க! வாழ்க!'' என்ற கோஷம் ஆயிரம் கண்டங்களிலிருந்து கிளம்பி எதிரொலி செய்தது.

அணிவகுத்த படையிலிருந்து ஒரு வீரன் முன்னால் வந்து நின்றான்.

''வரதுங்கா! என்ன சேதி?'' என்று பரஞ்சோதி கேட்டார்.

''தாங்கள் இங்கிருந்து சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் இரண்டு வீரர்கள் குதிரை மீது வந்தார்கள். அவர்கள் ரதத்துடன் கண்ணபிரானையும் பத்துப் போர் வீரர்களையும் அழைத்துச் சென்றார்கள்....''

''என்ன? கண்ணபிரானை அழைத்துச்

சென்றார்களா?'' என்று பரஞ்சோதி பர பரப்புடன் கேட்டார்.

''ஆம், தளபதி! அவசர காரியமாகக் காஞ்சிக்குப் போக வேண்டும் என்று சொன்னார்கள்.....''

''அந்த வீரர்கள் யார்? தெரியாதா...?''

வரதுங்கன் சற்று தயங்கி விட்டு, ''தூதுவர்களில் ஒருவர், தமது பெயர் வஜ்ரபாகு என்று சொன்னார். இன்னொருவர் ஒற்றர் படைத் தலைவர் சத்ருக்னன். சிங்க இலச்சினை காட்டியபடியால் கண்ணபிரானையும், வீரர்களையும் அனுப்பினேன். இதோ தளபதிக்கு அவர்கள் கொடுத்த விடேல் விடுகு!★'' என்று கூறி ஓலையை நீட்டினான்.

வஜ்ரபாஹு'' என்று சொன்னவுடனேயே பரஞ்சோதியும் மாமல்லரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். வந்தவர் சக்கரவர்த்திதான் என்று இருவருக்கும் தெரிந்து போய் விட்டது.

பரஞ்சோதி அவசரமாக ஓலையை வாங்கி நிலா வெளிச்சத்தில் பார்த்தார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது:

''தளபதி பரஞ்சோதிக்கு மகேந்திர போத்தரையர் எழுதுவது: நான் சௌக்கியம். துர்விநீதன் மழவராய கோட்டையில் சிறையில் இருக்கிறான். வாதாபிப் படை திருப்பதியைத் தாண்டி விட்டதாம். மாமல்லனை அழைத்துக் கொண்டு ஒரு கணம் கூட வழியில் தாமதியாமல் காஞ்சி வந்து சேரவும். மாமல்லன் வருவதற்கு மறுத்தால் இந்தக் கட்டளையைக் காட்டி அவனைச் சிறைப்படுத்திக் கொண்டு வரவும்.''

இதற்குக் கீழே விடை வேல் முத்திரையிட்டிருந்தது. முத்திரைக்குக் கீழே மறுபடியும் எழுதியிருந்தது:

''ஒருவேளை நீங்கள் வருவதற்குள் கோட்டைக் கதவு சாத்தியாகிவிட்டால், புத்த பகவானைத் தியானம் செய்யவும்.''

பரஞ்சோதி படித்து விட்டு ஓலையை மாமல்லரிடம் கொடுத்தார். மாமல்லர் ஓலையை வாங்கிப் படித்தார். படித்து விட்டுப் பரஞ்சோதியை நோக்கினார்.

''பல்லவ குமாரா! தொந்தரவு கொடுக்காமல் உடனே கிளம்புகிறீர்களா? உங்களைச் சிறைப்படுத்தக் கட்டளையிடட்டுமா?'' என்று தளபதி பரஞ்சோதி வேடிக்கை கலந்த குரலில் கேட்டார்.

''ஆம், தளபதி! என்னைச் சிறைப்படுத்தியே கொண்டு போங்கள். படையெடுத்து வரும் பகைவர்களுக்குப் பயந்து கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளும் நாட்டிலே சிறையாளியாயிருப்பதே மேல்'' என்று மாமல்லர் கூறி, மார்பில் அணிந்திருந்த ஆபரணங்களையும், இடுப்பில் செருகியிருந்த உடைவாளையும் கழற்றிக் கீழே எறிந்தார்.

அப்போது பரஞ்சோதியும் தமது உடைவாளையும் தலைப்பாகையையும் எடுத்துத் தரையில் எறிந்து விட்டுச் சொன்னார்: ''எனக்கும் இந்தத் தளபதி உத்தியோகம் வேண்டியதில்லை. தம்மை நம்பி வந்த படை வீரர்களை நட்டாற்றிலே விட்டு விட்டு, ஒரு நாட்டியக்காரப் பெண்ணின் காதலைத் தேடி ஓடும் குமார சக்கரவர்த்தியின் கீழ்த் தளபதியாயிருப்பதைக் காட்டிலும் 'நமப் பார்வதி பதயே! ஹர ஹர மகாதேவா!' என்று பஜனை செய்து கொண்டு ஊர் ஊராய்ப் போகலாம். இதோ நான் கிளம்புகிறேன். நீங்களும் உங்கள் வீரர்களும் எப்படியாவது போங்கள்!''

மாமல்லர் சற்று நேரம் பூமியையும் சற்று நேரம் வானத்தையும் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, ''தளபதி! கிளம்புங்கள், போகலாம். நமக்குள் சண்டை போட்டுக் கொண்டிருப்பதற்கு இது தருண மல்ல. காஞ்சிமா நகரை நெருங்கிப் பகைவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்தாமற்போனால் நீங்களும் நானும் கையிலே வாள் பிடித்து என்ன பயன்? என் தந்தையிடம் கோட்டைக் கதவைச் சாத்தக் கூடாதென்றும், காஞ்சிக்கு வெளியே பகைவர்களுடன் போர் நடத்தியே தீர வேண்டும் என்றும் கோரப் போகிறேன். நீர் என்னை ஆமோதிப்பீர் அல்லவா?''

பரஞ்சோதி ஒருகணம் யோசித்து விட்டு, ''ஐயா! மகேந்திர பல்லவர் தங்களைப் பெற்றெடுத்த தந்தை; அவரிடம் உரிமையுடன் சண்டை பிடித்து எதையும் தாங்கள் கேட்கலாம். ஆனால் பல்லவேந்திரர் என்னுடைய தந்தையும், சக்கரவர்த்தியும், சேனாதிபதியும் மட்டும் அல்ல; அவரே என்னுடைய கடவுள். அவருடைய சித்தம் எதுவோ, அதுதான் என்னுடைய விருப்பம். அதற்கு மாறாக என்னால் ஒன்றும் சொல்லவும் முடியாது; செய்யவும் முடியாது. ஆனால், தங்களுடைய தந்தை

---

★ விடை + வேல் + விடுகு : அதாவது ரிஷபமும் வேலும் அடையாளமிட்ட பல்லவச் சக்கரவர்த்தியின் ஓலை.

அமரர் கல்கி

யின் கட்டளை பெற்றுத் தாங்கள் பகைவர்களுடன் போரிடச் செல்லும் பட்சத்தில் தங்களுக்கு ஒரு அடி முன்னாலே நான் இருப்பேன். என் உடம்பில் உயிர் உள்ள வரையில் இந்த வாக்கை மீற மாட்டேன்!'' என்றார்.

நண்பர்கள் இருவரும் ஆயத்தமாக நின்ற குதிரைகள் மீதேறிக் 'கல்வியிற் கரையிலாத காஞ்சிமா நகரை' நோக்கி விரைந்தார்கள்.

## நாற்பத்தோராம் அத்தியாயம்

# பிழைத்த உயிர்

வராக நதியில் சென்று கொண்டிருந்த படகுகளையே சிவகாமி உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கையில், ஆயனர் பின்னால் மூச்சு வாங்க ஓடி வந்தது யார் என்று திரும்பிப் பார்த்தார். குண்டோதரன் பின்னால் நிற்பதைக் கண்டு, ''அப்பனே! இத்தனை நேரம் எங்கே போயிருந்தாய்?'' என்று கேட்டார்.

''அதை ஏன் கேட்கிறீர்கள், ஐயா! அக்கரைக்கு நான் போய்த் தளபதியிடம் மாமல்லர் இங்கு பத்திரமாயிருப்பதைத் தெரிவித்து விட்டுத் திரும்பினேன். தளபதியும் வீரர்களும் படகுகள் சம்பாதித்துக் கொண்டு வருவதற்குள்ளே நான் முன்னால் வந்து விட வேண்டுமென்றுதான் விரைந்து வந்தேன். வந்து பார்த்தால் ஆற்றங்கரையில் நான் கட்டி விட்டுப் போன பானைத்



தெப்பத்தைக் காணோம். மாலை நேரத்து மங்கலான வெளிச்சத்தில் யாரோ ஒருவர் தெப்பத்தைச் செலுத்திக் கொண்டு இந்தக் கரையண்டை வந்து கொண்டிருந்தது தெரிந்தது. மொட்டைத் தலையையும் காவித் துணியையும் பார்த்தால், புத்த பிக்ஷு மாதிரி இருந்தது. நம்ம நாகநந்தியடிகள் தானாக்கும் என்று கூப்பிட்டுப் பார்த்தேன். பிக்ஷு திரும்பிப் பார்க்கவே இல்லை. எனக்கு அசாத்திய கோபம் வந்து விட்டது. உலகத்திலேயுள்ள காவித் துணி அணிந்த புத்த பிக்ஷுக்களையெல்லாம் வாயில் வந்தபடி உரத்த குரலில் திட்டினேன். என்னுடைய குரலைக் கேட்டு விட்டு, நதிக் கரையோடு வந்த இரண்டு பேர் என்னிடம் வந்து, 'என்ன அப்பா சமாசாரம்?' என்று விசாரித்தார்கள். நான் விஷயத்தைச் சொன்னேன். நாகநந்தி பிக்ஷுவைத் தேடிக் கொண்டுதான் அவர்களும் வந்தார்கள் என்று தெரிந்தது. அப்புறம் நாங்கள் மூன்று பேருமாக மரக் கட்டைகளையும் கொடிகளையும் கொண்டு தெப்பம் கட்டிக் கொண்டு இக் கரைக்கு வந்து சேர்ந்தோம்.



உடனே, அவசர அவசரமாக நமது மடத்துக்கு ஓடினேன். அதற்குள் மாமல்லர் புறப்பட்டு விட்டார் என்றும், நீங்களும் வழியனுப்பப் போயிருக்கிறீர்கள் என்றும் தெரிந்தது. மறுபடியும் இவ்விடம் ஓடி வந்து பார்த்தால், அதற்குள் எல்லாரும் படகிலே ஏறிக் கொண்டு விட்டார்கள். பாருங்கள் ஐயா! இராஜ குலத்தினரை மட்டும் நம்பவே கூடாது. மாமல்லர் என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே கிளம்பி விட்டார். பார்த்தீர்களா? ஏதடா, மூன்று நாளாய் உயிருக்குயிரான சிநேகிதனைப் போலப் பழகினோமே என்ற ஞாபகம் கொஞ்சமாவது இருந்ததா?''

இவ்விதம் மூச்சு விடாமல் குண்டோதரன் பேசியதையெல்லாம் ஒரு காதினால் கேட்டுக் கொண்டிருந்த சிவகாமி, ''ஆமாம் குண்டோதரா! இராஜ குலத்தவரை நம்பவே கூடாதுதான்!'' என்றாள்.

ஆயனர், ''அதெல்லாம் இருக்கட்டும், குண்டோதரா! நாகநந்தி இந்தக் கிராமத்துக்கு வந்தாரென்றா சொல்லுகிறாய்? நான் பார்க்கவில்லையே?''

''நாகப் பாம்பு அவ்வளவு சுலபமாக வெளியிலே தலைகாட்டி விடுமா? புற்றிலே ஒளிந்து கொண்டிருக்கும்'' என்றான் குண்டோதரன்.

''பெரியவர்களைப் பற்றி அப்படியெல்லாம் சொல்லாதே, குண்டோதரா! நாக நந்தி பெரிய மகான். உண்மையில், அவரும் இந்தக் கிராமத்திலேயே தங்கி விட்டால் எனக்கு வெகு சந்தோஷமாயிருக்கும். பாறைக் கோயில்கள் அமைப்பது பற்றி அவர் நல்ல நல்ல யோசனைகள் கூறுவார்'' என்றார் ஆயனர். பிறகு, ''இன்னும் யாரோ இரண்டு பேர் நாகநந்தியைத் தேடிக் கொண்டு வந்தார்கள் என்றாயே! அவர்கள் யார்?'' என்று கேட்டார்.

''குருநாதரே! அந்த மனிதர்கள் கூடச் சிற்பக் கலையிலே ரொம்பப் பிரியம் உள்ளவர்கள் போலிருக்கிறது. நம்முடைய பானைத் தெப்பம் பாறையில் மோதி உடைந்ததே, அதே இடத்தில்தான் நாங்களும் மரக் கட்டைத் தெப்பத்தில் வந்து இறங்கினோம். பாறைகளைப் பார்த்ததும் அந்த மனிதர்களில் ஒருவர் என்ன சொன்னார் தெரியுமா; உங்களைப் போலவே 'இந்தப் பாறைகளைக் குடைந்து எவ்வளவு அழகான கோயில்கள் அமைக்கலாம்!' என்றார். எனக்கு அதிசயமாயிருந்தது. ''என் குருவும் அப்படித்தான் சொன்னார்!'' என்றேன். 'யார் உன் குரு?' என்று அந்த மனிதர் கேட்டார். உங்கள் பெயரைச் சொன்னதும் அவர் மிகவும் ஆச்சரியப்பட்டார். உங்களைக் கூட அவருக்குத் தெரியும் போலிருக்கிறது, குருவே!''

''அப்படி யார், என்னைத் தெரிந்தவர்? பாறைகளைப் பார்த்ததும் கோயில் ஞாபகம் வரக்கூடியவர் நான் அறிந்த வரையில் ஒரே ஒருவர்தான் உண்டு. அவர் இங்கே வருவதற்கு நியாயம் இல்லையே! வேறு யாராயிருக்கும்?'' என்றார் ஆயனர்.

''அவர்கள் இந்த ஆற்றங்கரை ஓரத்

---

## குவிஸ் டைம்

1. சினிமாவில் கனவுக் காட்சிகளில் செயற்கைப் புகை மண்டலம் எப்படி வருகிறது?

2. தமிழில் முதன் முதலாக இரட்டை வேடம் ஏற்று நடித்த நடிகர் யார்? எந்தப் படத்தில்?

3. வசனத்தில் பரபரப்பூட்டிய பராசக்தி படத்தின் இசையமைப்பாளர் யார்?

4. கண்ணதாசன் எழுதின முதல் சினிமாப் பாட்டு எது?

5. தமிழில் வெளியான முதல் டப்பிங் படம் எது?

6. வீரப்பாவின் வில்லன் சிரிப்பு வெகு பிரசித்தம். அவர் முதலில் எந்தப் படத்தில் இடிச் சிரிப்பு சிரித்தார்?

7. 'அம்மா என்றால் அன்பு; அப்பா என்றால் அறிவு' - அடிமைப் பெண் படத்தின் இந்தப் பாடலைப் பாடியவர் யார்?

8. கம்ப்யூட்டர் உபயோகித்து முழுக்கவும் இசையமைக்கப்பட்ட தமிழ்ப் படம் எது?

9. மிக அதிக எண்ணிக்கையில் கலைஞர்களைத் திரையுலகுக்குத் தந்த குடும்பம் யாருடையது?

விடைகள் 48 ஆம் பக்கம்.

திலேதான் எங்கேயோ படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். நான் தேடிப் பிடித்து அழைத்துக் கொண்டு வருகிறேன். நீங்கள் முன்னால் போங்கள், குருவே!'' என்றான் குண்டோதரன்.

இதற்குள் படகுகள் வராக நதியில் பாதிக்கு மேல் கடந்து சென்றுவிட்டபடியால், மண்டபப்பட்டு வாசிகள் ஒருவருக்கொருவர், ''திரும்பிப் போகலாமா?'' என்று கேட்டுக் கொண்டு, கிராமத்தை நோக்கிக் கிளம்பத் தொடங்கினார்கள். அவர்களுடன் ஆயனரும் சிவகாமியும் புறப்பட்டுச் சென்றார்கள்.

போகும் போது அந்த கிராமவாசிகள் மாமல்லரின் அரிய குணங்களைப் பற்றியும், பரஞ்சோதிக்கும் அவருக்கும் உள்ள சிநேகத்தைப் பற்றியும் பாராட்டிப் பேசிக் கொண்டு போனது சிவகாமியின் காதில் விழுந்து கொண்டிருந்தது. மாமல்லரின் பிரிவினால் வறண்டு உலர்ந்து போன அவள் உள்ளத்தில் அந்த வார்த்தைகள் இன்ப மழைத் துளிகளைப் போல் விழுந்தன.

ஆயனர் முதலியவர்களைப் பிரிந்து நதிக்கரையோடு சென்ற குண்டோதரன் நிலா வெளிச்சத்தில் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டே சென்றான். பாறைகள் நிறைந்த இடத்தை அணுகிய போது இன்னும் சர்வஜாக்கிரதையாக முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டு சென்றான். சட்டென்று பாறை மறைவிலிருந்து இருவர் வெளிப்பட்டதும் ஒருகணம் திகைத்து விட்டு, அவர்கள் இன்னார் என்று தெரிந்து கொண்டதும், எதிரில் வணக்கத்துடன் நின்றான்.

''குண்டோதரா! நல்ல காரியம் செய்தாய்! எங்களை இப்படிக் காக்க வைத்து விட்டுப் போயே போய் விட்டாயே? நீ உயிரோடிருக்கிறாயா, அல்லது யமலோகத்துக்கே போய் விட்டாயா என்றே எங்களுக்குச் சந்தேகம் வந்து விட்டது!'' என்றார் ஒற்றர் தலைவர் சத்ருக்னன்.

''எஜமானனே! உங்கள் புண்ணியத்தினால் உயிர் பிழைத்தேன். கொஞ்சம் அஜாக்கிரதையாயிருந்திருந்தால் நிஜமாகவே யமலோகத்துக்குப் போயிருப்பேன். இந்தக் கூரிய கத்தி என் நெஞ்சிலே பதிந்திருக்கும்!'' என்று குண்டோதரன் கூறி, நாக வடிவமாகப் பிடி அமைத்திருந்த ஒரு அபூர்வமான சிறு கத்தியை எடுத்து நீட்டினான்.

(தொடரும்)



அருள்வாக்கு

# மாணவன், மாணாக்கன்

சிஷ்யன் என்றும் வித்யார்த்தி என்றும் ஸம்ஸ்க்ருதத்தில் சொல்வதை நாம் மாணவன், மாணாக்கன் என்கிறோம். செய்யுளில் இதுவே 'மாணி' என்று வரும். வாமனாவதாரத்தைப் பற்றி, திவ்யபிரபந்தத்தில் ''மாணி,'' ''மாணி'' என்று வரும். ''மானவ'' என்று இரட்டைச் சுழி ''ன'' போட்டுச் சொன்னால் மநுஷ்யன் என்றுதான் அர்த்தம். 'மநு'விலிருந்து ஜீவ குலம் தோன்றியது. அதனாலேயே ''மநுஜன்'', ''மநுஷ்யன்'', ''மானவன்''; தமிழ் ''மனிதன்'', ''மானுடன்'' முதலான பெயர்கள். Man என்பதும் மநு ஸம்பந்தமானதே. மனஸ் என்ற சிந்தனா சக்தி படைத்தவன் மநு. Man என்றால் thinking animal என்று இதே அபிப்ராயத்தைத்தான் அவர்களும் சொல்கிறார்கள். மானவன் என்றால் மனிதன். ''மாணவ'' என்று மூன்று சுழி போட்டுச் சொன்னால் 'சிறுவன்' என்று அர்த்தம். சின்ன வயஸிலேயே கல்வி கற்கத் தொடங்குவதால் வித்யார்த்தியை மாணவன், மாணாக்கன் என்று சொல்வதாக ஏற்பட்டிருக்கிறது. தமிழ் ''மாணி''யும் இதிலிருந்தே வந்திருந்தாலும், மாணி என்றால் ''மாணவன்'' என்பது போல் எந்த ஜாதியையும் சேர்ந்த ஸ்டூடன்டைக் குறிக்காது. மாணி என்றால் உபநயனமான ப்ரம்மசாரியைத்தான் குறிக்கும். ஆதியில் ப்ராம்மண ப்ரம்மசாரியே பெரும்பாலும் ஸ்டூடன்டாக இருந்ததால்தான் இப்படிப் பிற்காலத்திலும் சொல்வதாக வந்திருக்கிறது.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

# புத்தகச் சுமை போதாதா?



"இன்னைக்குச் சாயங்காலம் போய் அத்தையைப் பார்த்துட்டு வந்துடலாமா?" என்று கணவன் கேட்டால்,

"பசங்க ஸ்கூல் விட்டு வரட்டுங்க; அவங்களுக்கு ஹோம் ஒர்க் எவ்வளவு இருக்குன்னு பார்த்துட்டுத் தீர்மானம் பண்ணுவோம்..."

என்று மனைவி பதில் சொல்லும் அளவுக்கு ஹோம் ஒர்க் குடும்ப வாழ்க்கையில் ஓர் அங்கம் வகிக்கிறது!

புத்தகச் சுமை அதிகமா? ஹோம் ஒர்க் சுமை அதிகமா என்று திணறும் அளவுக்குக் குழந்தைகளைக் கஷ்டப்படுத்த வேண்டுமா?

◆ விளையாட வேண்டிய நேரத்தில்...

ஹோம் ஒர்க்குக்கு அதி முக்கியத்துவம் தரும் ஷ்ரைன் வேளாங்கண்ணி பள்ளியைச் சேர்ந்த மாலதி பணிக்கர் கூறுகிறார்:

"எல். கே. ஜி. முதலே நாங்கள் ஹோம் ஒர்க் கொடுப்பதற்குக் காரணம் எழுதும் பழக்கம் சிறு வயதிலேயே வர வேண்டும் என்பதுதான். கையெழுத்து நன்றாகப் படியும். ஆரம்பம் முதலே ஹோம் ஒர்க்குக்கு முக்கியத்துவம் தரப்படுவதால் குழந்

# ஹோம் ஒர்க் சுமை வேறா?

தைகள் அதைக் கஷ்டமாக நினைக்காமல் பள்ளி நடைமுறையில் ஒரு பகுதி என்று ஏற்றுக் கொண்டு விடுகிறார்கள். அன்றாடம் நடத்தப்படும் பாடங்களின் அடிப்படையில் ஹோம் ஒர்க் தரப்படுவதால் பரீட்சை சமயத்தில் தனியாக முயற்சிகள் எடுத்துப் படிக்க வேண்டாம். பெற்றோர்கள் அதிகம் படிக்காதவர்களாக இருந்தால் கூட குழந்தைகள் சிரமமின்றிச் சுய



◆ ...வீட்டுப் பாட வேதனை!

மாகப் படிக்க ஹோம் ஒர்க் உதவுகிறது. அவர்கள் எவ்வளவு தூரத்துக்குப் பாடத்தைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்று நாங்கள் கணிக்க உதவுகிறது.''

இதே பள்ளியில் படிக்கும் மாணவி ராதாவும் அவள் தாய் கமலாக்ஷி கோபாலசாமியும் ஹோம் ஒர்க் செய்வதால் நன்மைகள்தான் உண்டாகின்றன என்றே கூறினார்கள். வேறொரு பள்ளியில் ஆரம்ப வகுப்பில் பயிலும் சிறுவன் பாலசுப்ரமணியம் ''எனக்கு ஹோம் ஒர்க்கே பிடிக்காது. எங்கம்மாதான் சும்மா 'ஹோம் ஒர்க் பண்ணு, ஹோம் ஒர்க் பண்ணு'னு நச்சவாங்க'' என்று அங்கலாய்த்தான்!

'ஹோம் ஒர்க் செய்தால்தான் விளையாடப் போகலாம்; ஹோம் ஒர்க் முடிச்சாத்தான் டிபன்' என்று சௌகரியப்படி நிபந்தனை விதிக்கும் பெற்றோர்களிடமிருந்து குழந்தைகளைக் காப்பாற்ற எண்ணியோ, அல்லது பெற்றோர்களே குழந்தைகளுக்குப் பதில் ஹோம் ஒர்க்கைச் செய்து விடுவதைத் தவிர்க்கவோ சில பள்ளிகளில் ஒரு புதிய யுக்தியைக் கையாள ஆரம்பித்திருக்கிறார்கள்.

ஒவ்வொரு நாளும் முதல் அல்லது கடைசி 'பீரியடை' ஹோம் ஒர்க் வகுப்பு என்றே நிர்ணயித்து அந்த நேரத்தில் குழந்தைகளை ஹோம் ஒர்க் செய்ய வைக்கிறார்கள்.

பத்மா சேஷாத்ரி பள்ளியில் பத்தாம் வகுப்பு படிக்கும் என். சீனிவாசன், ''பள்ளியில் எங்களுக்கு ஃப்ரீ பீரியட் கிடைக்கும். அப்போதே ஹோம் ஒர்க்கை முடித்து விடுவோம். செய்யும்போதே சந்தேகம் வந்தால் சம்பந்தப்பட்ட ஆசிரியரிடம் சென்று

கேட்க முடியும்...'' என்று கூறுகிறாள்.

மாணவன் படித்த பாடத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்ற 'குறிக்கோள்' இந்த முறையால் பெருமளவு நிறைவேறுவதோடு, வீட்டில் பெற்றோர் குழந்தைகளிடையே நிகழும் ஹோம் ஒர்க் தொடர்பான 'யுத்தங்கள்' தவிர்க்கப்படுகின்றன! அவர்கள் அன்போடு உறவாட நேரம் கிடைக்கிறது. மேலும், பள்ளிச் சூழலிலேயே ஹோம் ஒர்க் செய்யப்படுவதால் சிந்தனை ஓட்டம் டி.வி.; விருந்தினர் வருகை, போன்ற இடையூறுகளால் பாதிக்கப்படுவதில்லை.

"என்ன நீங்க ஹோம் ஒர்க்கே குடுக்கறதில்லையே!'' எனப் பெற்றோர் அங்கலாய்க்கும் அளவுக்கு முதல் சில வகுப்புகளில் பிள்ளைகளுக்குச் சுதந்திரம் அளிக்கிறார்கள் வித்யா மந்திர் சீனியர் செகண்டரி பள்ளியில்.

♦ சுபலட்சுமி

♦ யமுனா

''எங்களிடம் ஹோம் ஒர்க் பற்றிக் கேட்க வரும் பெற்றோர்களிடம், 'தினமும் உங்கள் குழந்தைகளுடன் 45 நிமிடங்களாவது பேசிப், பழகுங்கள்' என்று நாங்கள் அறிவுரை கூறுகிறோம். குழந்தைகள் டென்ஷன் இல்லாமல் சந்தோஷமாய் இருக்க வேண்டும் என்று நாங்கள் நினைப்பதால் ஆரம்ப வகுப்புகளில் அவர்களை நிர்ப்பந்திப்பதில்லை. சீருடை கூட ஐந்தாம் வகுப்புக்குப் பிறகுதான். இரண்டாம் வகுப்பு வரை பாடங்கள் அதிகம் இருக்காது. கைவேலைகள்தான். மூன்றாவது நான்காவது வகுப்பில் கொஞ்சமாக ஹோம் ஒர்க் கொடுக்க ஆரம்பிப்போம். ஐந்தாம் வகுப்பு வரை பரீட்சைகள் கிடையாது!''

''ஆரம்ப வகுப்புகளில் ஹாய்யாக இருந்து விட்டு ஐந்தாவது முதல் பரீட்சை, ஹோம் ஒர்க் என்று பாடங்களை, ''சீரியஸாக'' எடுத்துக் கொள்வதில் சிரமம் இல்லையோ?''

''இல்லை'' என்கிறார் வித்யா மந்திர் மாணவி எம். சுப்புலட்சுமி. சுப்புலட்சுமியின் தாய் யமுனா, ''என் குழந்தைகள் என்றுமே படிப்புக்குப் பெற்றோர் உதவியை நாடியதில்லை'' என்கிறார். இவர் மகன் வேங்கடசுப்ரமணியனும் இதே பள்ளியில் படித்து அனைத்திந்தியாவிலும் முதல் மாணவனாக வந்தவன்.

''என் கணவரும் நானும் பொறுப்பான உத்யோகத்தில் இருக்கிறோம். நாங்கள் ஹோம் ஒர்க்கில் உதவ வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தால் மிகவும் கஷ்டப்பட்டிருப்போம். வித்யா மந்திர் கல்வி முறை குழந்தைகளைச் சுயமாகவே கற்றுக் கொள்ள ஊக்குவிக்கிறது'' என்றார் யமுனா.

வித்யா மந்திர் பள்ளியில் கே. ஜி. வகுப்பில் ஒரு ஆசிரியைக்கு முப்பது குழந்தைகள் என்ற விகிதாசாரம் இருப்பதால் குழந்தைகளிடம் தனிக் கவனம் செலுத்த முடிகிறது.

ஏறத்தாழ இதே விகிதாசாரம் ஜே. கிருஷ்ணமூர்த்தி ஃபவுண்டேஷன் பள்ளியிலும் நிலவுகிறது. இப் பள்ளியிலும் சிறு பிள்ளைகள் தலையில் ஹோம் ஒர்க் சுமையை ஏற்றுவதில்லை. ஆனால் பொதுத் தேர்வு எழுத வேண்டிய பத்தாம் வகுப்பை நெருங்கும் தருணத்தில் நிறைய ஹோம் ஒர்க் கொடுக்கத்தான் செய்கிறார்கள்.

இதற்குள் மாணவர்களும் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்ந்து விடுவதால் ஹோம் ஒர்க்கைப் பளுவாக எண்ணுவதில்லை.

ஆனால் மிகச் சிறு பருவத்தில் பல்வேறு பாடங்கள் பல்வேறு ஆசிரிய, ஆசிரியைகளால் கற்பிக்கப்படும் போது, அவர்கள் தலைக்குத் தலை ஹோம் ஒர்க் கொடுக்க, எல்லாவற்றையும் முடிக்க நிர்ப்பந்திக்கப்படும் குழந்தை, படிப்பையே வெறுத்து விடலாம்; அல்லது ஹோம் ஒர்க்கை முடிப்பது மட்டுமே குறிக்கோளாகி, பாடத்தைப் புரிந்து கொள்வதும், சிந்திப்பதும் இரண்டாம் பட்சமாகி விடலாம். இவ்வாறு நேராமல் பெற்றோர் கவனித்துக் கொள்வது அவசியம். ஹோம் ஒர்க்குக்கு அப்பாற்பட்டும் தினமும் சற்று நேரம் குழந்தைகளுடன் குழந்தையாக இருந்து குழந்தைகளுக்காகவே நேரத்தைச் செலவிட வேண்டும்.

– வைதேகி தேசிகன்

வண்ணப்படம் : உத்ரா

# கொஞ்சம் சிக்கனம் வேண்டாமோ?

மின்னல் வேகத்தில் தன் முகவாயை இரண்டு தோள்களிலும் இடித்துக் கொண்டாள் பாமா.

அப்படி அவள் தன்னெதிரே இடித்துக் கொண்டதில், தான் ஏதோ முட்டாள்தனமாகப் பேசி விட்டதாகப் பாமா நினைக்கிறாள் என்பது ராகவனுக்குப் புரிந்தது. ''பக்கத்திலே இருக்கிற மார்க்கெட்டிலே போய் வாராந்திரக் காய்கறிகளை வாங்கிட்டு வரேன்'' என்று தான் சொன்னதில் என்ன முட்டாள்தனம் இருக்க முடியும் என்று தலையைப் பிய்த்துக் கொண்டான்.

''பக்கத்து மார்க்கெட்டிலே காய்கறிங்க எல்லாம் ரங்கநாதன் தெரு மார்க்கெட்டிலே விற்கிறதைப் போல ரெண்டு பங்கு விலை... தெரியுமா?'' என்றாள்.

''பாமா, முன்னே நாம மாம்பலத்திலே இருந்தோம். அதனாலே அந்த மார்க்கெட்டிலே சல்லிசாகக் காய்கறி வாங்க முடிஞ்சது. இப்போ நாம சொந்த வீடு கட்டிக்கிட்டு, பல்லாவரத்துக்கு வந்தாச்சு. இன்னமுமா மாம்பலத்துக்குப் போய் காய்கறி வாங்க முடியும்?'' என்று அவன் கேட்டான்.

சசின் டெண்டுல்கர் டென்னிஸ் மேட்சில் எவ்வளவு கோல் போட்டார் என்று கேட்பவனை, தீவிர விளையாட்டு ரசிகர் எப்படிப் பார்ப்பாரோ அதே போல் ஓர் ஏளனப் பார்வையைப் பாமா தன் கணவன் மீது வீசினாள். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவளாக, ''பேசாம சொல்றதைக் கேளுங்க. நாளைக்கு ஆபீஸ் முடிஞ்சதும் மாம்பலம் ரயில்வே ஸ்டேஷனிலே வெயிட் பண்ணுங்க. நான் அங்கே வரேன். என்ன பார்க்கறீங்க? நான் வந்துதான் ஆகணும். உங்களுக்கு எதையுமே சரியா செலக்ட் செய்யத் தெரியாது'' என்றாள்.

'உன்னை மனைவியாகத் தேர்ந்தெடுத்த ஒரே விஷயத்தை வச்சி மொத்தமாக ஒரு முடிவுக்கு வராதே' என்று முணுமுணுத்த ராகவன் வெளிப்படையாக ''நீதான் பார்த்து வாங்கப் போறியே, அப்போ நான் எதற்கு?'' என்றான் பல்லைக் கடித்துக் கொண்டு.

''என்னாலே வெயிட்டெல்லாம் தூக்க முடியாது!'' என்று ராகவன் வரத் தேவைப்பட்ட ஒரே காரணத்தை ரத்தினச் சுருக்கமாகத் தெரிவித்தாள் பாமா.

ராகவனும், பாமாவும் திட்டமிட்டபடி சந்தித்துக் கொண்டனர். ஸ்டேஷனை ஒட்டியிருந்த தெருவில் நடந்தனர். திடீரென்று பாமாவுடைய நடையின் வேகம் குறைந்தது. அருகே ஒரு காய்கறிக்கடை. அதில் ராகவனுக்குப் பிடித்த பீன்ஸும், பாமாவுக்குப் பிடித்த வெண்டைக்காயும் கொட்டிக் கிடந்தன. எதை வாங்கப் போகிறாள்? என்ற ஆவலுடன் ராகவன் காத்திருந்தபோது அவனுக்கு ஓர் அதிர்ச்சி. காய்கறிக் கடையை அலட்சியம் செய்துவிட்டு அருகிலிருந்த ஒரு கவரிங் நகைக் கடைக்குள் நுழைந்தாள் பாமா.

''என்னங்க! நான் கவரிங்கிலே புது மோஸ்தரிலே நாலு வளையல் வாங்கிக்கலாம்னு இருக்கேன்.''

''எதுக்கும்மா கவரிங்?'' என்று ஆரம்

அருண் சரண்யா

பித்த ராகவன் ''ஏன், தங்க நகைகளே வாங்கித் தரேன்னு சொல்றீங்களா?'' என்று அவளிடமிருந்து பாய்ந்து வந்த பதில் கேள்வியில் பெட்டிப் பாம்பாய் அடங்கிப் போனான்.

அடுத்த முப்பது நிமிடங்களில், அரை குறைத் திருப்தியோடு நாலு வளையல்களை வாங்கி பேக் செய்து கொண்டு வந்தாள் பாமா.

''ஏங்க, கோன்-ஐஸ்னால் என் அம்மாவுக்கு உயிர்'' என்ற பாமாவை, ''விழுப்புரத்திலே இருக்கிற உங்க அம்மாவுக்கு இங்கேயிருந்து கோன் ஐஸ்க்ரீமையெல்லாம் பேக் செய்து அனுப்ப முடியுமா?'' என்று ராகவன் கேட்டது மிகவும் அதிருப்திப்படுத்தியது.

''நீங்க ஆனாலும் ஜடம்ங்க. அம்மாவுக்குப் பிடிச்ச ஐட்டமெல்லாம் எனக்கும் பிடிக்கும்னு ஒரு தடவை உங்களுக்குச் சொல்லியிருக்கேனா இல்லையா?'' என்று செல்லமாகக் கடிந்து கொண்டவாறு கோன்-ஐஸ் கடையருகே ப்ரேக் போட்டது போல் நின்றாள்.

பத்து நிமிடம் கழித்து வாயைக் கைக்



குட்டையால் துடைத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பியவள், அருகிலிருந்த காய்கறிக் கடைக்குச் சென்று பேரம் பேசினாள். விலை விசாரித்ததும் ''என்னவோ மாம்பலத்திலே காய்கறி ரொம்ப விலை மலிவுன்னு சொன்னீங்களே. இங்கேயும் யானை விலை குதிரை விலைதான்'' என்று ராகவன் மீது அடாத பழி சுமத்தினாள்.

காய்கறிகள் வாங்கிய பிறகு அந்த ஏரியாவில் உள்ள பல பொருள்கள் வாங்கப்பட்டன. இரண்டு வாசல் மிதிகள் (''சுந்தரி



''நான் எழுதற தொடர்கதையில் இன்னும் பாதி கதை கூட முடியலை. அதுக்குள்ளேயே கடைசி அத்தியாயத்தைப் பிரகரிச்சுட்டீங்களே, ஏன்?''

''ஹி... ஹி... கதையோட முடிவைத் தெரிஞ்சுக்க ரொம்ப ஆர்வமாயிருக்குன்னு நிறைய வாசகர்கள் கடிதம் எழுதியிருந்தாங்க.... அதான்!''

- ஞா. ஞானமுத்து.



வீட்டிலே இந்த மாதிரி மிதியடிதான் போட்டிருக்காங்க''), இரண்டு கோலமாவுக் குழல்கள் (''யாராலே காலை வேளையிலே புள்ளி வச்சிக் கோலம் போட முடியுது?''), தன் அக்காவுக்காக மூன்று டஜன் ஹேர் பின்கள் (''பாவம் ரொம்ப நாளா சொல்லிக்கிட்டிருக்கா. வாங்கக் கை வரல்லியாம்''), ஒரு ஜோடி செருப்பு (''மழை நாளைக்கு இந்த மாதிரி சாண்டல்தான் நல்லது''), நான்கு டபரா டம்ளர்கள் (''எவ்வளவு இருந்தாலும்தான் வீட்டுக்குத் தேவையாயிருக்கு''), ஒரு பேன் சீப்பு (''வீட்டிலே எத்தனை ஷாம்பூ வாங்கினாலென்ன, உங்கம்மாவுக்கு இதுதான் வேண்டியிருக்கு''), ப்ளாஸ்டிக் மாவிலைத் தோரணம் (''வாசலிலே பார்வையா இருக்கும்''), ஒரு சின்ன பர்ஸ் (''எல்லாரும் இது மாதிரி ஒண்ணை வச்சிருக்காங்க''), ஒரு கைப்பை (''யார்கிட்டேயும் இந்த மாதிரி இல்லையாக்கும்'') இப்படி ஒவ்வொரு சமாதானத்துடன் ஒவ்வொரு பொருளும் வாங்கப்பட்டு ராகவன் தூக்க வேண்டிய எடை கூடிக் கொண்டே போனது.

அப்போதுதான் ராகவனுக்கு ஞாபகம் வந்தது. ''பாமா, வீட்டிலே ஷேவிங் க்ரீம் ஆயிடுச்சு. வாங்கணும்'' என்றான்.

''ஏங்க, சொந்தமா வீடு கட்டிக்கிட்டு இருக்கோம். கொஞ்சம் கட்டுப்பாடு வேணுங்க. சாதாரண சோப்பிலே ப்ரஷ்ஷை வைச்சித் தேய்ச்சா தானா நுரை வந்துட்டுப் போகுது. இல்லேன்னா கொஞ்ச நாளிலே நாம வாங்குற வார இதழோடு இலவச இணைப்பாக ஷேவிங் க்ரீம் கொடுத்தாலும் கொடுப்பாங்க. பொறுத்திருந்து பார்ப்போமே.'' என்ற பாமா ''என்னாலே ரொம்ப முடியல்லீங்க. பல்லாவரம் ஸ்டேஷனிலேயிருந்து வீட்டுக்கு, ஆட்டோவிலேதான் போயாகணும்'' என்று கண்டிஷனாகச் சொன்னாள்.

இன்று மாம்பலத்தில் காய்கறி வாங்க வந்ததில் எவ்வளவு காசு மிச்சம் என்று மனத்திலேயே கணக்குப் போட்டுப் பார்த்ததில் மயக்கம் வரும்போலிருந்த ராகவனுக்கும் ஆட்டோ தேவைதான் என்று பட்டது.




ஃபௌண்டேஷன்'' என்கிற அமைப்பு. இந்தப் பள்ளிக்கூடத்தை இந்த அம்சத்துக்காக மட்டும் சுவீகாரம் எடுத்துக் கொண்டுள்ளது. அண்மையில் சென்னையில் எம். ஏ. எம். ராமசாமியின் தலைமையில் ஆரம்பிக்கப்பட்டது இவ்வமைப்பு.

கிரிக்கெட், ஹாக்கி, கால்பந்து, டேபிள் டென்னிஸ், கூடைப்பந்து, பாட்மிண்டன், செஸ், கேரம் போன்ற பல விளையாட்டுகளிலும் சிறிதளவு திறமையும், ஆர்வமும் கொண்ட சுமார் நூற்றுப் பத்து மாணவர்களைத் தேர்ந்தெடுத்து, பிற்காலத்தில் குறிப்பிடத்தக்க சாதனைகள் புரியும் விதத்தில் அவர்களுக்குத் திட்டமிட்ட, தீவிரமான பயிற்சியளிக்கப் போகிறார்கள்.

# இது விளையாட்டான பிரச்னை அல்ல!

முத்தையால் பேட்டை உயர்நிலைப் பள்ளி - சுமார் மூவாயிரம் மாணவர்கள் படிக்கும் இந்தப் பள்ளிக்கூடம், ஜனசந்தடி மிகுந்த வடசென்னையில் உள்ளது. பத்தாம் வகுப்பிலும் சரி, 'பிளஸ் டூ'விலும் சரி, ஓரளவுக்கு நல்ல 'ரிசல்ட்' பெற்று வரும் இந்தப் பள்ளியின் பெரிய குறை, மாணவர்களுக்கு, விளையாட்டு மைதான வசதி இல்லை என்பதுதான்.

உடற்பயிற்சி பீரியட் என்றால் ஒன்று வகுப்பறைக்குள்ளேயே உ ட் கா ர் ந் து கொண்டிருக்க வேண்டும். இல்லையெனில் உயர்நீதிமன்ற வளாகத்திலுள்ள சட்டக் கல்லூரி விளையாட்டு மைதானத்துக்குப் போக வேண்டும். (பள்ளிக்கூடம், சட்டக் கல்லூரியின் மைதானத்தைத் தினமும் மாலை இரண்டு மணி நேரம் பயன்படுத்திக் கொள்ளக் கட்டணம் செலுத்துகிறது.)

இத்தகைய காரணங்களால், பள்ளிக்கூடத்தின் பெரும்பாலான மாணவர்களுக்கு விளையாட்டிலே ஆர்வமில்லை. அப்படியே ஆர்வம் இருந்தாலும் திறமையை மேலும் வளர்த்துக் கொண்டு மாநில அளவிலோ, தேசிய அளவிலோ பிரகாசிக்க வாய்ப்புக்கள் இல்லை. இந்த விளையாட்டுப் பிரச்னையை 'சீரியஸ்' ஆக எடுத்துக் கொண்டுள்ளது ''ஸ்போர்ட்ஸ்

''நாங்கள் தேர்ந்தெடுத்துள்ள அனைவருமே ஏழாம் வகுப்பு மாணவர்கள்தான். இந்தப் பருவத்தில் பயிற்சியை ஆரம்பித்தால், பத்தாம் வகுப்பு படிக்கையில், மாணவன் நன்கு தேர்ச்சி பெற்றவனாய் விளங்குவான்'' என்கிறார் ஸ்போர்ட்ஸ் ஃபௌண்டேஷனைச் சேர்ந்த மோகன் ராமலிங்கம்.

இதற்கெனச் சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய்க்கு 'பட்ஜெட்' போடப்பட்டுள்ளது. தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களின் பயிற்சி நேரம் போக, மற்ற நேரங்களில், ஸ்போர்ட்ஸ் ஃபௌண்டேஷன் உபயத்தில், பள்ளிக்கூடத்துக்குக் கிடைத்துள்ள விளையாட்டு உபகரணங்களை மற்ற மாணவர்களும் பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கப்படவிருக்கிறார்கள்.

''இன்று தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள நூற்றுப் பத்துப் பேரில், ஒரு சிலராவது, எதிர்காலத்தில் நம் நாட்டுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் சிறந்து விளங்குவார்கள்'' என்று பள்ளியின் உடற்கல்வி ஆசிரியர் சந்திரசேகரன் நம்பிக்கையோடு கூறுகிறார்.

– எஸ். சந்திரமௌலி
படம்: ஜனனி

# மானுடம் உருவாகும்போது...

நாராயணன் மாஸ்டரைத் தேடிக் கொண்டு அவர் அறைக்குப் போகிற அனேக பையன்களுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி. அவருக்கு மாற்றல் உத்தரவு வந்திருந்தது. ராமநாதபுரம் மாவட்டத்துக்கு. நிர்வாகக் காரணம் முன் விட்டு.

மிகவும் பாதிக்கப்பட்டது நாராயணன் மாஸ்டர் அல்ல; சிதம்பரம் தான். அவன் ப்ளஸ்டு படிக்கிறவன். மாஸ்டருக்குப் பிரதம சீடன்.

''சார்... இதை நாங்க விடப் போற தில்லே... இன்னிக்கு ஸ்ட்ரைக் பண்ணப் போறோம். பள்ளிக் கூடமே கொதிச் சிட்டிருக்கு.''

நாராயணன் அவன் அன்பை மெச்சுவது போல சின்ன சிரிப்பு ஒன்றை வெளிப்படுத்தி னார்.

''இது எச்.எம். சூழ்ச்சி சார்! பி.கே. எம்மை விட்டு அவர் தான் பெட்டிஷன் தட்டிவிட்டுட்டு பின்னாலேயே போய் உங்க ளுக்கு ட்ரான்ஸ்ஃபர் ஏற்பாடு பண்ணி யிருக்கார்.''

நாராயணன் மாஸ்டருக்கு அவன் தேவை யில்லாமல் பெரிய பேச்சுப் பேசுவ தாகத் தோன்றியது.

சிதம்பரம் குமுறுகிறான். புரிந்தது. இன்று வெறும் குமுறலோடு நிற்கிற இவ னைப் பத்தாவதில் நாராயணன் மாஸ்டர் கலகக்காரனாகச் சந்தித்திருந்தார்.

அவனுக்கு மூக்கணாங்கயிறு போட்டு மடக்கி, படிமானத்துக்குக் கொண்டுவர இரண்டு ஆண்டு பிடித்திருக்கிறது அவருக்கு.

''சரி, அப்படியே வச்சுக்க! ஸ்ட்ரைக் பண்ணி என்ன சாதிக்கப் போறே?''

''இப்படியே மகாத்மா காந்தி மாதிரி பேசிப்பேசியே எங்களைக் கோழையாக்கிட் டீங்க சார்!''

சிதம்பரம் இன்னும் கூட ஓவராக அவருடன் பேசுவான்; பேசியிருக்கிறான். இதற்கெல்லாம் பாதிக்கப்படுகிறவர் அல்ல நாராயணன் மாஸ்டர்.

''நான்தான் நாளைக்குப் போயிடப் போறேனே!''

நாளையிலிருந்து நீ வீரன். விடுதலை பெற்ற வீரன் என்று நினைவுறுத்துகிற தோர ணையில் அவர் சொன்னார்.

''சார்!'' அவன் கலங்கிவிட்டான். கொடுத்த அடியை அவர் மௌனமாக வாங்கிக் கொண்டது மட்டுமின்றி இனி உங்க ளுக்கு நிர்ப்பந்தமில்லை, நான் போகச் சித்தமாகிவிட்டேன், இரண்டு ஆண்டுகளாக என் மீது நீங்கள் காட்டிய மரியாதைத் தொல் லைக்கு நன்றி. இப்படி என்னென்ன அர்த்த மெல்லாமோ தென்படுகிற மாதிரி ஒரு பார்வை. ஒரு சிரிப்பு.

''சார்...'' என்று மறுபடியும் சொன்னான் சிதம்பரம். குரல் கம்மியிருந்தது. தலை கவிழ்ந்தான். நிமிரும் போது கண்கள் கலங்கி யிருந்தன.

''சரி... கிளாஸுக்குப்போ! எனக்கு ரிலீ விங் ஆர்டர் ரெடியாயிட்டிருக்கு. நான் ஆபீஸ் ரூம் போறேன்!''

''இன்னிக்குப் பௌர்ணமி சார்!''

''ஹைக்கிங் தானே? உண்டு. அஞ்சரை மணிக்குப் பசங்களை ரெடி பண்ணிரும்முக்குக் கூட்டிட்டு வந்துடு. அஞ்சே முக்காலுக்கு மலை அடிவாரம். கடைசி ஹைக்கிங். விட் டுடக் கூடாது.''

விட்டால் சிதம்பரம் அங்கேயே அழுது விடுவான் போலிருந்தது. முதுகில் ஓங்கி ஒரு தட்டு தட்டினார்.

''இதுதான் கோழைத்தனம்!''

''சார்....'' என்று தடுமாறினான் சிதம்பரம்.

''கிளாஸுக்குப் போ.''

அதற்கு மேல் நாராயணன் மாஸ்டர் அங்கே நிற்கவில்லை. அலுவலக அறை நோக்கி விறுவிறு வென்று நடந்தார்.

ஒவ்வொரு பௌர்ணமியிலும் பக்கத்தி லிருந்த மலைக்குப் பையன்களோடு ஹைகிங் போகிற மாதிரி அன்றும் அவர்

காத்திருந்தார். முதலில் வருகிற சிதம்பரம் வரவில்லை.

ரகுபதி தான் வந்தான்.

பர்ஸைத்திறந்து ஒரு இருபது ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினார். பேசவில்லை.

பொரிகடலை, மிக்சர், பக்கோடா எல்லாம் வாங்கிவா வழக்கம் போல் என்று அதற்குப் பொருள்... ரகுபதிக்குப் புரிந்தது.

ஆனால் அவன் நோட்டை வாங்கவில்லை.

''இல்லே சார்..... இன்னிக்கு நாங்க தான் வாங்கப்போறோம்.''

நோட்டை வைத்துக் கொண்டே ஒரு கணம் யோசித்தார்.

''ஓகே! இதுக்கு வாழைப் பழம் வாங்கி வா.''

மீண்டும் அவன் தயங்கினான்.

''சொல்றேன் இல்லே'' என்று அவர் புருவத்தை நெறித்தார். அவன் மறு பேச்சின்றி நோட்டை வாங்கிக் கொண்டு வெளியேறினான்.

ஐந்தரை வரை சிதம்பரம் வரவில்லை.



வருத்தத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் நாராயணன் மாஸ்டர் புறப்பட்டார். பையன்கள் பின் தொடர்ந்தனர்.

வழக்கமாக வழியெல்லாம் பாட்டும் பேச்சும் சிரிப்புமாக ஒரே கலகலப்பாக இருக்கும். இன்று நிசப்தம். மௌன ஊர்வலம் போல.

வையவன்

''கோபி, ஒரு பாட்டு பாடேண்டா!''

''மூடில்லே சார்.''

''ஜெகன், என்னடா பேஸ்த் அடிச்ச மாதிரி வர்றான்?''

''சார் நாங்க எல்லாம் நொந்து போயி ருக்கோம்!''

''டேய்... இதை என்னை நம்பச் சொல் றீங்களா?''

''நம்பாட்டா விட்டுருங்க!''

நாராயணன் மாஸ்டருக்கு நெஞ்சு விம்மி யது. ஒரு கணம் தான். அவரும் சாதாரண மனிதன்தான் என்று நினைவூட்டுவது போல். அவர் சமாளித்துக் கொண்டார்.

அன்பு ஓர் உரம்தான். பலவீனப்படுத்தும் சக்தி அல்ல. புரிந்து கொண்டிருந்த அவ ருக்கே இது சிரமமாக இருந்தது.

மலையடிவாரத்தில், மொட்டைப் பாறை மீது எதிரில் ஒரு குட்டையில் கல்லெ றிந்து கொண்டிருந்த சிதம்பரம் தென் பட்டான்.

''சிதம்பரத்துக்கு ரூமுக்கு வரப்பிடிக்க லேடா கோபி!'' என்று கிண்டல் செய்தார் மாஸ்டர்.

அவன் எழுந்து கொண்டான்.

தன் குரல் தனியாக ஒற்றை ஒதுக்கத்தில் விலகி நிற்பதை உணர்ந்தவாறு மலையேறிக் கொண்டே நாராயணன் மாஸ்டர் பேசிக் கொண்டு போனார்.

''சிதம்பரம் இன்னிக்கு என்ன சொன் னான் தெரியுமா? நான் மகாத்மா காந்தி மாதிரி பேசிப் பேசியே ஒங்களையெல்லாம் கோழையாக் கிட்டேனாம்!''

யாரும் பதில் தரவில்லை.

''அவன் சொன்ன உதாரணம் தப்பு! நான் காந்திஜி மாதிரி பேசலே. காந்திஜி பேசி யாரும் கோழை ஆகலை.''

''சார்....'' என்று இடைமறித்து என்னவோ சொல்லப் போனான் சிதம்பரம்.

''இரு நான் முடிச்சுடறேன்! எனக்கு ட்ரான்ஸ்ஃபர் வந்திருக்கு. நான் அரசு ஊழியன். இளம்புனா இளம்பியாகணும். இவன் ஸ்ட்ரைக் பண்றேன்றான். அதுக் கெல்லாம் மசிந்து என் ட்ரான்ஸ்ஃபர் உத்த ரவு ரத்து ஆயிடாது. என்ன சாதிக்கப் போறீங் கன்னு கேட்டதுக்கு இந்த பதில் சொல் றான்...''

மலைப்பாதை நெட்டுக் குத்தாக வளர்ந்து கொண்டு போயிற்று. அரை மணி நடந்தால் ஒரு மைதானத்தில் மேடை போட்ட மாதிரி ஒரு பாறை அடுக்கு வரும். நிலா வெளிச்சம். நல்ல காற்று. மூலிகை மணம் கமழும் காற்று. அங்கேதான் போய்க் கொண்டிருந்தார்கள்.

''ஜெகனுக்கும் சிதம்பரத்துக்கும் தாண்டா ஒங்கள்ளே எல்லாரையும் விட என் மேலே அதிக கோபம் இருக்கும்.''




ஏன் எதற்கு என்று யாரும் கேட்க வில்லை.

''டென்த்லே அவங்க பெஞ்சை ஒடச்சுக் கிட்டு இருந்தப்போ நான் தான் கையைக் கட்டிக்கிட்டு அவங்களை வேடிக்கை பார்த் தேன்!''

பிறகு அவர்கள் எதிரிலேயே ஓர் ஆசாரியைக் கூப்பிட்டு ரிப்பேர் செய்வித்து, அந்தக் கூலியைத் தன் கையிலிருந்து கொடுத் ததை அவர் சொல்ல வில்லை.

''ஐ திங்க்.... அவங்களுக்கு எது எது மேலயோ . ஆத்திரம்! அதையெல்லாம் தீர்த்துக்கணும்னா, இந்த நாராயணன் மாஸ்டர் வேற பேசிப்பேசி அறுக்கறார்னு ஒரு பொறுமல்... இல்லே ஜெகன்?''

ஜெகன் முகம் உர்ரென்றிருந்தது. திரும் பிப் பார்க்காமலேயே அவருக்கு அது அப்ப டித்தான் இருக்கும் என்று தெரியும்.

''சார்.... நீங்க எது வேணும்னாலும் பேசுங்க!''

எல்லோரும் சூம்பிப் போயிருந்தனர். இன்று ஹைக்கிங் இருந்திருக்க வேண்டாம் என்று நினைப்பது போல. ஆனால் நாரா யணன் மாஸ்டருக்கு அது அவசியப்பட்டது. இவர்கள் தன்னைப் பிரிவது போல தான் இவர்களைப் பிரிவதும் வருத்தமான விஷயம்.

அந்த வருத்தம் கொண்டாடிக் கொள்கிற கண்ணீர்க் காட்சியாக இருப்பதில் அவருக் குச் சம்மதமில்லை. அது ஒரு மகிழ்ச்சியின் முத்திரையோடு முடிவுற வேண்டும். அதற் கும் மேல்... அதற்கும் மேல்...

அதைப் பாறை அடுக்கின் மேல் பார்த்துக் கொள்ளலாம் என்று முடிவு கட்டி யவராக அவர் நடந்தார்.

''ரகுபதிக்கு அவங்க பெற்றோர் அவன் டாக்டரோ இஞ்சினியரோ ஆயிடணும்னு கொடயறதிலே ஆத்திரம். லோகுவுக்கு அவன் இஷ்டப்படி சினிமா வீடியோ பார்க்க விட மாட்டேங்கறாங்கன்னு ஆத்திரம். கணபதிக்கு அவன் ரசிகர் மன்றத்திலே தலை யிடக் கூடாதுன்னு தடுக்கறாங்களேன்னு ஆத்திரம். பொதுவா எல்லாருக்கும் படிங் கடா படிங்கடான்னு எப்பப்பார்த்தாலும்

தயாரிப்பாளர் : நம்ம அடுத்த படத்திலே ஸ்டண்ட் காட்சி புதுமையாக இருக்கணும். இதுவரை எந்தப் படத்திலேயும் வராத காட்சியாகவும் இருக்கணும்.

டைரக்டர்: அதற்கென்ன? காரிலே தப்பித்துப் போகிற வில்லனை, கதாநாயகன் ரோடு எஞ்சினில் துரத்திப் போய்ப் பிடிக்கிற மாதிரி எடுத்துடலாம்!

-வெள்ளகால். இரா. கந்தையா.

எல்லாரும் கழுத்தை அறுக்கிறாங்களேன்னு பெரிய ஆத்திரம் இல்லையா?

எல்லோரும் மௌனமாக நடந்தனர். லோகு மட்டும் தாள முடியாமல் பேசினான்.

''இப்பிடிப் பேசிட்டே இருந்துட்டு நீங்க எங்களையெல்லாம் விட்டுட்டு நாளைக்குக் கௌம்பிடுவீங்க.''

''நானாவா போறேன்?''

பாதை ஒரு பாம்பு வளைசல் வளைந்தது.

''நீங்களா அனுப்புறீங்க?''

''நாங்க எங்க எதிர்ப்பைக் காட்டறோம் சார். எங்களை விடுங்க.''

''காட்டினா அதுக்கு என்ன அர்த்தம் வரும் தெரியுமா?''

''நீங்க எதிர்க்கச் சொன்னீங்கன்னு யாராவது சொல்வாங்க.''

''அது தான் ஈஸியாச் சொல்லிடலாமே! அதுக்கு மேல ஒண்ணு இருக்கே அதை யாராவது யோசிங்க.

''இப்பவே வேணாம். மேடைப்பாறையிலே சொன்னாப் போதும். அட என்னாங்கடா... என்னமோ மௌன ஊர்வலம் வந்துகிட்டிருக்கிங்க... ஜெகன் நீ பாடப் போற தில்லே.... இல்லே?''

ஜெகன், சர்ர் என்று மாஸ்டருக்குக் கோபம் வந்து விட்டது என்று புரிந்து கொண்டு தெளிந் தான்.

''சரி போங்கடா... நானே பாடறேன்.'' என்று சற்றும் தயங்காமல் நாராயணன் மாஸ்டர் பாடத் தொடங்கினார். பாரதி பாட்டு.

''காலமாம் வனத்தில் அண்டக் கோல மாமரத்தின் மீது காளி சக்தி என்ற பெயர் கொண்டு ரீங்காரமிட்டு உலவி வரும் வண்டு....''

கணீரென்ற குரல். மலை ஏற்றத்தையோ மூச்சிரைப்பையோ காட்டாத குரல். 'ஸாரே ஜஹான்ஸே அச்சா'வையும் 'கேன் யூ கெட் மீ எ லாஃபிங் வீடை'யும் பாடுகிற அதே ஈடுபாடு தோய்வு.

கொஞ்ச தூரம் போனதும் பையன்களுக்கும் உற்சாகம் தொற்றிக் கொண்டது. ஒருவர் மாற்றி ஒருவர் என்று சினிமாப் பாட்டுகளைப் பாட ஆரம்பித்து விட்டார்கள். சிதம்பரம் தவிர.

மேடைப் பாறை வரும் போது நிலா உதித்து விட்டது. வெளிச்சம் பாறையைக் கழுவி மெழுகிக் கொண்டிருந்தது.

நாராயணன் மாஸ்டரைச் சுற்றிப் பையன்கள் உட்கார்ந்தனர். ரகுபதி பொட்டலங்களைப் பிரித்து ஆளுக்குக் கொஞ்சம் அள்ளிக் கொடுத்துக் கொண்டு வந்தான். அதற்கு அடுத்து ஜெகன் வாழைப் பழத்தை ஒவ்வொன்றாகக் கொடுத் தான்.

அது முடிந்ததும் வாட்டர் பாட்டில் தண்ணீர் எல்லாருக்கும் ஒரு வலம் வந்தது.

எல்லாம் முடிந்து காற்று மெல்ல வீசத் தொடங்கிய போது நாராயணன் மாஸ்டர் பேச ஆரம்பித்தார்.

''சிதம்பரத்துக்கு இப்ப எது மேலேடா ரொம்ப ஆத்திரம்... சொல்லு?''

''எது மேலேயும் இல்லே சார்!'' என்று சிதம்பரம் சொன்னான்.

''நிஜம்மா?''

''நிஜமா சார்.''

''ஸ்ட்ரைக் பண்றேன்னியே.''

''இப்ப இல்லே சார்.''

''ஏன்?''

''தப்புன்னு தோணிப்போச்சு.''

''எப்படி?''

மேடைப் பாறை வரையில் ஒத்திப் போட்டிருந்த செய்திக்காக அவர் தூண்டில் போட்டார்.

சிதம்பரம் பதிலளிக்கவில்லை.

''வேற யாராவது?''

கூட்டத்தில் ஒரு யோசனை மேகம் கவிந்தது.

''நீங்க என்னவெல்லாம் சொல்லிட்டு இருந் தீங்களோ அதுக்கு மரியாதை இல்லாம போயிடும் சார்!'' ஜெகன் சொன்னான்.

''கிட்டத்தட்ட சரி! தெளிவா யாராவது சொன்னா நல்லா இருக்கும்.''

மீண்டும் யோசித்தார்கள்.

அவர்களுக்கு வாய்ப்பளிக்கிற மாதிரி இரண்டு நிமிடம் விட்டுப் பின்னர் நாராயணன் மாஸ்டர் சொன்னார்.

''உங்களை எல்லாம் நான் ஏன் நேசிச்சேன், நேசிக்கறேன்னு ஒங்க எல்லாருக்கும் தெரியுமா?''

''சொல்லுங்க சார்!''

''ஜஸ்ட் உங்களுக்காகத்தான். வேற பிரதி பலன் எதிர்பார்த்து இல்லே.''

''.....''

''வழியிலே வர்றப்ப சொன்னேனே... நீங்க எல்லாம் எது எதுமேலயோ ஆத்திரமாயிருக்கிங்க... ஒங்களை எல்லாரும் புடிச்சு ஜெயில்லே தள்ளிட்டாப்பிலே சங்கிலியிலே மாட்டிட்டாப்பிலே ஒரு கோபம் இருக்கு இல்லே.''

''ஆமாம் சார்!'' ஒரு கோரஸ் வந்தது.

''இதுக்கெல்லாம் பேஸிக்கா இருக்கறது ஒங்க மேல உண்மையான அன்பு யாருக்கும் இல்லேன்ற ஏக்கம் தான். அதான் என்னை அட்ராக்ட் பண்ணியது! ஆனா உண்மை என்ன தெரியுமா?''

''.......''

''உங்களை நீங்களே போதுமான அளவு நேசிக்கலே.''

''புரியலே சார்...''

''இப்ப புரியாட்டி பரவால்லே. நிதானமா யோசிச்சா... நான் கணக்கிலே மாசக் கணக்கிலே நெனச்சுக்கிட்டே இருந்தா புரிஞ்சுடும். எங்கிட்ட நீங்க பிரியமா இருக்கீங்களே... இது தான் நீங்க ஒங்களோடயே நேசமா இருக்கறதுக்கு சாம்பிள். இதை நான் மிஸ்யூஸ் பண்ணிட்டா ரொம்ப ரொம்ப சீப் ஆயிடுவேன்.''

அவர்களுக்கு மூடுபனியின் ஊடே ஓர் உருவம் புலப்படுவது போல் என்னமோ புரிந்தது.

''எனக்கு என்னமோ இந்த ட்ரான்ஸ்பர்லே எந்த வருத்தமும் இல்லாத மாதிரியும், ஒங்களை எல்லாம் விட்டுட்டுப் போறதிலே கவலையே இல்லாத மாதிரியும் தோணலாம். எனக்கும் வருத்தமா இருக்கு. வெறுப்பா இருக்கு. கோவமாக் கூட இருக்கு...''

கூட்டம் அவரையே வெறித்துப் பார்த்தது.

''எல்லாத்துக்கும் ஒரு தொடக்கம்னா ஒரு முடிவு உண்டு. இங்கே வந்தேன். ஒங்களையெல்லாம் பார்த்தேன். பழகினேன். இப்போ ஒரு முடிவு வந்திருக்கு. ''இதை ஏன் எதிர்க்கணும்... நானோ எனக்காக நீங்களோ தாறுமாறா ஏதாவது செஞ்சா என்ன பலன்?''

அவர் தோள்களை உலுக்கிக் கொண்டார். ஒரு பெருமூச்சு விட்டார். கைகளை விரித்தார்.

''ஒரு பலனும் வராது. எனக்குக் கெட்ட பேர் வர்றதை விட எதையோ என்னத்துக்காகவோ இழந்துட்ட வருத்தம் தான் எனக்கு மிஞ்சும்.'' நாராயணன் மாஸ்டர் அந்த 'எனக்கு'வை அழுத்திச் சொன்னார்.

சிதம்பரம் குறுக்கிட்டான்.

''நீங்க ரொம்ப அடக்கி வாசிக்கறீங்க சார்.''

''என்ன தப்பு? பெருக்கி வாசிக்கறதை விட அடக்கி வாசிக்கிறது மேல் இல்லே.''

எல்லோரும் சிரித்தனர்.

''இன்னும் கூட ஒங்களுக்கு நான் சரியா எக்ஸ்ப்ளெய்ன் பண்ணேனான்னு தெரியலே'' என்று தயங்கினார்.

''சார்.... சார்.... க்ளாஸ் எடுக்கறீங்க சார்!'' என்று ஜெகன் குறுக்கே கத்தினான்.

''ஆமாம்... லெட் இட் பீ..... கடைசி க்ளாஸ்...''

மௌனம் நிலவிற்று.

''நீங்க டாக்டர் ஆகிறதோ இஞ்சினீயர் ஆக றதோ அமைச்சர் ஆகறதோ கலெக்டர் ஆகிறதோ எனக்கு ரொம்ப சந்தோஷம் தந்துவிடாது. நீங்க அதெல்லாமே ஆகணும்னு நான் எதிர்பார்க்கலே. ஆய்ட்டீங்கன்னா அதனாலே வருத்தப்பட்டுற மாட்டேன். நீங்க அதுக்கும் மேலே மேன்மையான மனுஷங்களானீங்க; அதுக்கு எங்கியோ நான் ஒரு சின்னத் தூண்டுதலா இருந்திருக்கேன்னா அப்ப தான் என் சந்தோஷம் உண்மையா இருக்கும்.''

கூட்டத்தில் உணர்ச்சிகளை மீறி எதுவோ ஒரு கனம் வந்து அழுத்திற்று.

மறுநாள் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் நாராயணன் மாஸ்டரை வழியனுப்ப சிறு கூட்டம் நின்றிருந்தது. எல்லாரும் பையன்கள். சிதம்பரம் நடுவில் நின்றிருந்தான்.

ரயில் வந்தது. சாமான்களை ஏற்றி அவர் ஸீட் பிடித்து உட்கார்ந்தார். வெளியே பல கரங்கள் ஆடின. இரண்டு கைகள் மட்டும் கூப்பியிருந்தன. அது சிதம்பரம். ரயில் புறப்படுகிற வரை கூட கும்பிட்ட கை கும்பிட்ட மாதிரியே நின்றான்.

நாராயணன் மாஸ்டரும் கும்பிட்டார். மானுடம் உருவாகும்போது அதை வணங்கித் தானே ஆகவேண்டும்?

---

## 34 ஆம் பக்க விடைகள்...

1. டிரை-ஐஸ் என்ற உலர்ந்த பனிக்கட்டியை வெந்நீரில் போட்டால், 'குபுகுபு'வெனப் புகை வரும்.

2. பி. யு. சின்னப்பா. படம் - உத்தமபுத்திரன்.





3. எஸ். டி. சுதர்சனம்

4. 'கலங்காதிரு மனமே!' கன்னியின் காதலி, என்ற படத்தில்.

5. ஹரிச்சந்திரா - கன்னடத்திலிருந்து டப்பிங் செய்யப்பட்டது.

6. ஜெனோவா

7. ஜெயலலிதா

8. புன்னகை மன்னன்

9. எம். ஆர். ராதா குடும்பம். (எம். ஆர். ராதா, எம். ஆர். வாசு, ராதா ரவி, ராதிகா, நிரோஷா)

- மௌஷ்மி.

சிரிக்க வையுங்கள்;
சிங்கப்பூர் செல்லுங்கள்!

50

# பள்ளியின் லட்சிய வாசகம்: "தள்ளுபடி!"







''அப்பா, 'Mother Tongue' என்ற காலத்துக்கு நேரே என்ன எழுதணும்?''

'' 'ரொம்ப நீளம்'னு எழுது!''

- சென்னை - 53, எஸ். கமலா சந்தானம்.

★ ★ ★ ★

அண்ணா நகர் நோக்கி 7C யில் சென்று கொண்டிருந்தேன். அழகான இளம் பெண்ணுடன் ஏறிய வாலிபன் மம்மி டாடிக்கு இரண்டு டிக்கெட் எடுத்தான். வழியெங்கும் அவளுடன் அரட்டையடித்துக் கொண்டு வந்த அவன், சற்று நேரம் கழித்து கண்டக்டரிடம், ''சார்! மம்மி டாடி போயாச்சா'' என்று கேட்டான்.

கண்டக்டர் உடனே, ''உங்க நல்ல நேரம் மம்மி டாடி இன்னும் வரலே' என்று இரட்டை அர்த்தத்துடன் கூறிய போது பஸ்ஸில் ஒரே சிரிப்பொலி.

- சென்னை - 13, தக்கோலம் புகாரி.

★ ★ ★



''மாப்பிள்ளைக்கு என்ன ஆச்சு? கல்யாணப் பந்தல்லே திடீர்னு 'ஆ' 'ஊ'ன்னு கத்தி சண்டை போடறார். டான்ஸ் ஆடறார்!''

''சிரஞ்சீவியா இருன்னு யாரோ வாழ்த்தினாங்களாம்!''

- மதுரை, என். உஷா தேவி.

★ ★ ★



''லேடி ஸ்டெனோவைக் கல்யாணம் பண்ணிண்டியே. லைப் இப்ப எப்படி இருக்கு?''

''ஆபீஸ்லே நான் அவளுக்கு டிக்டேட் பண்றேன்.




வீட்டிலே அவ என்னை டிக்டேட் பண்றா.''

- சென்னை - 91, வி. ந. ஸ்ரீதரன்.

★ ★ ★

''நீங்கதானே இந்தப் பள்ளிக்கூடத்தின் சத்துணவு டீச்சர்?''
''எப்படி கரெக்டா கண்டுபிடிச்சீங்க?''
''உங்களைப் பார்த்தவுடன் தெரியுதே!''

- தூத்துக்குடி, எம். பி. எம். ராஜவேலு.

★ ★ ★

''என்ன? உங்க பள்ளியின் லட்சிய வாசகம் தள்ளுபடியா? அப்படின்னா?''

''சீட்டுக்கு முதல்ல டொனேஷனைத் தள்ளு! அப்புறமா 'படி'ன்னு அர்த்தம்!''

- சிவசைலம், பி. ஜி. பி. இசக்கி.

★ ★ ★

இயற்பியல் பேராசிரியர் ஒரு கடுமையான விஷயத்தைக் கிடுகிடுவென்று வேகமாக விளக்கி விட்டுக் கடைசி பெஞ்ச் மாணவனைக் கேட்டார். ''இதுவரை நடத்தியதில் உனக்கு என்ன புரிகிறது?''

அந்த மாணவன், ''நேற்று ராத்திரி முழுக்க உட்கார்ந்து மனப்பாடம் செய்திருப்பது புரியுது'' என்றதும், வேறு வழியின்றி ஆசிரியரும் எங்களுடன் சிரித்தார்.

கடையநல்லூர், கணேசன்.

★ ★ ★




**நிருபர்: 'நீங்கள் ஆட்சிக்கு வந்தால் செய்யப் போகும் சாதனையில் ஒன்றைச் சொல்லுங்கள்?''**

**தலைவர்: ''இப்போது தண்ணீரிலிருந்து மின்சாரத்தை எடுத்து விட்டுத் தண்ணீர் மட்டும் தருகிறார்கள். நாங்கள் ஆட்சிக்கு வந்தால் இரண்டையும் சேர்த்தே தருவோம்!''**

**- சென்னை - 101, பா. லெட்சுமி நாராயணன்.**

## ஃப்ரிஜ் பரிசு: கூப்பன் நெ. 11

கொஞ்சம் கவனமாகப் படித்தால் போதும், 'நேற்றுவரை நந்தவனம்' தொடர் கதையில் நாங்கள் இந்த வாரம் வேண்டுமென்றே செய்துள்ள தவறு என்ன என்பது 'பளிச்'சென்று புரிந்து போகும். இப்படியே ஒவ்வொரு வாரமும் செய்யப்படும் ஒரு தவறைக் கண்டு பிடித்து அந்தந்த வாரக் கூப்பனில் எழுதி, சேகரித்து வைத்துக் கொள்ளவும். தொடர் முடிகிற வாரத்தில் எல்லாக் கூப்பன்களுடன் கதை பற்றிய 5-10 வரி விமர்சனமும் எழுதி எங்களுக்கு அனுப்பவும். மிக அதிகமான அளவில் தவறுகளைக் கண்டு பிடித்துத் திருத்தியவருக்கு ஃப்ரிஜ் பரிசு. ஆறுதல் பரிசுகளும் உண்டு.

தவறு : ______________________

திருத்தம் : ______________________

# ஜெ. அரசு தக்காளிக்குத் தடை விதிக்குமா?

**விஷ்ராம்**

எதிர்வீட்டுக்காரர் எல்லோரையும் நன்றாகத் திட்டக் கூடியவர். தக்காளி கிலோ பதினைந்து ரூபாய், இருபது ரூபாய் என்று விற்கிறதல்லவா? 'கொஞ்சம் தக்காளியைத் திட்டுங்களேன். மனசுக்கு ஆறுதலாயிருக்கும்' என்று கேட்டுக் கொண்டேன்.

இந்தத் தக்காளி யார்? இதன் வண்டவாளம் என்ன? நமக்குத் தெரியாதா, புரியாதா? மார்க்கெட்டில் மிகவும் செல்வாக்கு இருப்பது போல அடிக்கடி வேஷம் கட்டுகிறதே, இது அழுகித் தொலைத்தால் நெருங்க முடியுமா? சென்னையின் பெருமைமிக்க காய்கறி வியாபார ஸ்தலமான, புராதன கொத்தவால்சாவடியை இடம் மாற்றக் காரணமே அழுகல் தக்காளிகள்தான்.

தக்காளி, ஒரு தரம் கெட்ட அரசியல்வாதி போல. இதற்கு ஸ்டெடி புத்தி இடையாது. ஒரு மாதம் முன்பு வாலைச் சுருட்டிக் கொண்டு கிலோ இரண்டு ரூபாய்க்குக் கிடைத்தது. இப்போது இருபது ரூபாயாம்! ஸ்திர புத்தியில்லாத தக்காளியைச் சாப்பிடுகிறவர்களுக்கு எப்படி புத்தி ஸ்டெடியாக இருக்கும்? ஆகவே உறுதியான புத்தி தேவைப்படும் யாரும் தக்காளி சாப்பிடக் கூடாது.

சில கதாசிரியர்களும் கவிஞர்களும் (தற்காலக் கவிஞர்கள்) பெண்களின் கன்னத்தைத் 'தக்காளி போல' என்று வர்ணிக்கிறார்கள். இப்படி உவமித்தால் என்ன அர்த்தம்? இரண்டு நாளில் கன்னம் வாடி வதங்கிச் சுருக்கம் விழப் போகிறது என்று அர்த்தம்! எனவே பெண்குலம் தக்காளியை மட்டுமின்றி இத்தகைய வர்ணனையையும் எதிர்த்துப் போர்க் கொடி உயர்த்த வேண்டும்.

மேலை நாடுகளில் அழுகிய தக்காளிகளைத் தங்களுக்குப் பிடிக்காத தலைவர்கள் மீது எறிவது ஒரு வழக்கமாக இருந்து வருகிறது. ஏழைநாடுகளுக்கும் இந்தக் கலாசாரம் பரவி வருவதை டீ. வி. யில் பார்த்திருப்பீர்கள். கொரியப் பிரதமரின் தலையில் அழுகல் தக்காளியை எறிந்து



## அடுத்த இதழில்....

- ○○ புதிய பிரதமர்....
- ○○ அரசு அடகு வைத்த தங்கத்தை மீட்க முடியுமா? - ஓர் அலசல்
- ○○ நவீன ஓவியங்கள் வெறும் கிறுக்கல்களா?

அவரை அவமானப்படுத்திய நிகழ்ச்சியைக் கொஞ்ச நாள் முன் டீ. வி. யில் காட்டினார்கள். எவ்வளவு அருமையான கோட்டு சட்டை வீண்! பிரதமர் பதவி இன்று போகும் நாளை வரும். தக்காளிக் கறை போகுமா?

தக்காளி சாப்பிடுகிறவர்களுக்குத் தலைமை மீது அவநம்பிக்கை ஏற்படும். எப்போது தக்காளி அழுகும், எப்போது தலைவர் மீது வீசி எறியலாம் என்று தொண்டர்கள் காத்திருப்பார்கள். பூரண மதுவிலக்கு போல் தக்காளி விலக்குக் கொள்கையை அமுல்படுத்த இந்த ஒரு காரணமே போதுமே!

அரசியலை விட்டுத் தள்ளுங்கள். தமிழ்க் கலாசாரத்தில் தக்காளிக்கு இடம் உண்டா என்று யோசியுங்கள். எந்தச் சங்கப் பாடலிலாவது (முதல், இடை, கடை எதிலாவது) தக்காளி இடம்பெற்றிருக்கிறதா? அந்தக் கால மக்கள் தற்காலத்தவரைக் காட்டிலும் ஆரோக்கியமாக இருந்தார்கள் என்றால் அதற்குக் காரணம், அவர்கள் தக்காளி சாப்பிடாததுதான்.

மருத்துவ ரீதியாகவாவது இந்தத் தக்காளிக்கு நல்ல பெயருண்டா? என்றால் அதுவும் இல்லை.

'ஆப்பிள் எ டே கீப்ஸ் தி டாக்டர் அவே' என்பது போல், தக்காளி பற்றிய பழமொழி ஏதேனும் உண்டா? கிடையாது! மாறாக, சிறுநீரகத்தில் 'கல்' தோன்ற தக்காளி உடந்தையாக இருப்பதாகக் கருதப் படுகிறது. இதைக் கேட்டதிலிருந்தே பலருக்குத் தக்காளி என்றாலே அலர்ஜி தோன்றினால் வியப்பதற்கில்லை. பார்த்தீனியம் பூண்டுகளினால் ஆஸ்த்மா போன்ற அலர்ஜி பரவுகிறது என்று அந்தச் செடிகளை அழிக்கச் சொல்லி உத்தரவிட்ட ஆட்சியாளரின் கண்களில் ஏன் இந்தத் தக்காளிச் செடிகள் படவில்லை?

'தக்காளி ஒழிக! ஒழிக! ஒழிக!' என்று கூறி முடிக்குமுன் இந்தத் தக்காளி நிலுவைகள் மாநிலங்களுக்கிடையேயுள்ள நல்லுறவையும் எப்படி பாதிக்கிறது என்று சொல்லி வைக்கிறேன்.

நம்ம ஊர்த் தக்காளி சிறிய சைஸில் உள்ளது. கர்நாடக மாநிலத்திலிருந்து வரும் பெங்களூர்த் தக்காளி தளதளவென்று கவர்ச்சிகரமாகப் பெரிசு பெரிசாக உள்ளது. இது தமிழ்க் குடிமகனுக்கு (தோல்வியுற்ற சபாநாயகரைச் சொல்லவில்லை) ஒரு தாழ்வு மனப்பான்மையை உண்டாக்குகிறது. துவேஷம் வளர்கிறது. தேசிய ஒருமைப்பாடு குலைய வழிவகுக்கும் இந்தத் தக்காளி இனத்தை நாம் அடியோடு ஒழித்துத்தான் ஆக வேண்டும்.

ஒருமைப்பாட்டுக்கு உதவாத தக்காளிக்கு இந்திய மண்ணில் தோன்றிய பெருமையாவது உண்டா? அதுவும் கிடையாது. ஆப்ரிக்காவில் தோன்றி, தென் அமெரிக்கா சென்று, அங்கிருந்து இந்தியாவுக்கு வந்து ஒண்டிக் கொண்டிருக்கிறது.

இவ்வளவு கேவலமான பின்னணியை உடைய தக்காளி, கிலோ பதினைந்து ரூபாய், இருபது ரூபாய் என்று அலட்டிக் கொள்வது அதனுடைய மண்டைக் கனத்தையும், கரண்டல் புத்தியையும் காட்டுகிறது.

தமிழகத்தில் பதவி ஏற்றுள்ள செல்வி ஜெயலலிதா அவர்களின் அரசு, முதல் காரியமாகத் தக்காளிக்குத் தடை விதிக்க வேண்டும், அல்லது கிலோ தக்காளி இரண்டு ரூபாய்க்கு மேல் விற்கலாகாது என்று கட்டுப்பாடு விதிக்க வேண்டும்!

> தக்காளி விலை, கிலோ இரண்டு ரூபாயாகக் குறைந்து விடுமானால் தக்காளியின் குணநலன்களையும் பெருமைகளையும் பற்றி இதே நண்பர் பேசத் தயாராக இருக்கிறார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். தக்காளி மீது நமக்கு வெறுப்பில்லை. தக்காளியத்தின் மீதுதான் கோபம்.

## நல்ல வண்ணம் வாழலாம் - 11

'ஆசையே துன்பத்துக்குக் காரணம்', என்று பகவான் புத்தர் கண்டறிந்தார். அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்கிற ஆழ்வாரின் அறிவிப்பு இதே அலை வரிசையின் இரண்டாவது ஒலிபரப்பு. திருமூலர் இன்னும் கொஞ்சம் மேலே சென்று ''ஆசை அறுமின்காள் ஆசை அறுமின் காள், ஈசனோடாயினும் ஆசை அறுமின்காள்'' என்று கடவுள் மீதான ஆசையையும் கண்டிக்கிறார்!

இந்த ஆசையை மண்ணாசை, பெண்ணாசை பொன்னாசை என்று பகுப்பது பழைய பாட முறை. வேறு வடிவில் சிந்திக்கலாம். பொருட்பற்று, மனைவி மக்கள் பற்று, தன் மீது தான் வைத்திருக்கும்

# குடிசை வாசலில் ஒரு சக்கரவர்த்தி

பற்று என்று மூன்று நிலை ஆசைக்கு இருக்கிறது.

கார், வீடு, மனை, பணம், தோட்டம் என்று பல வகைப் பொருள்கள் மீது வைக்கும் பொருட்பற்று உயிரின் உய்வுக்குத் தடையாகிறது.

பஸ்ஸில் இருந்து இறங்கும் முன் பத்து பைசா சில்லறை பாக்கி வாங்க மறந்து போனால் பலருக்குப் பலநாள் தூக்கமே வராது. துக்கம்தான் வரும். சூரிய காந்திப்பூ சூரியனையே ரசிப்பது போல் சில்லறை பாக்கி வர வேண்டியவர்கள் கண்டக்டரையே முறைப்பது ஒரு ரசிக்கத் தக்க விஷயம்!

வாழவைக்கும் வலிமையுடையதாகக் காட்சிதரும் பொருள் எத்தனை பேரின் கல்லறைக் கதவுகளைத் திறந்திருக்கிறது! எனவேதான் பூச்சிக் கொல்லி மருந்து போல, பொருளை ஆட் கொல்லி மருந்தாகவே சமணத் துறவிகள் பேசுவார்கள்.

காட்டு வழியில் ஒரு துறவி போய்க் கொண்டிருந்தார். வழியில் எந்த உயிருக்கும் தம்மால் துன்பம் வந்து விடக் கூடாதே என்று தம் கையில் வைத்திருந்த கழியால் தட்டிக் கொண்டே நடந்தார்.

'ணங்' என்று ஒரு சப்தம் கேட்டது. எதிரே இருந்த புதரைத் தட்டிய போது அதில் இருந்துதான் அந்த ஒலி வருகிறது



என்று கண்டார். கழியால் புதரை விலக்கினார். உள்ளே ஒரு வெண்கலப் பானை. அத்தனையும் தங்கக் காசுகள். பளபள என்று ஒளி வீசின!

கண்ணைக் கவரும் தங்கத்தின் கை வரிசை அவரிடம் பலிக்கவில்லை. ''ஐயோ! ஆட்கொல்லி இருக்கிறதே! ஆட்கொல்லி இருக்கிறதே'' என்று விழுந்தடித்துக் கொண்டு அங்கிருந்து ஓடினார்.

பானை திறந்து கிடந்தது. சூரிய ஒளியில் தங்கக் காசுகள் மினு மினுத்தன. சிறிது நேரம் கழித்து வேறு இருவர் அந்த வழியே வந்தார்கள். இருவரும் ஒரே சமயத்தில் பானையைப் பார்த்தனர். ''இவனும் நோக்கினான், அவனும் நோக்கினான்!'' பிறகு ஒருவரை ஒருவர் ஒரு மாதிரியாகப் பார்த்தனர்.

பானையைக் கொட்டி காசுகளைப் பங்கிடுவது என்று முடிவானது. அடுத்து வெண்கலப் பானை யாருக்கு என்று பிரச்னை ஆரம்பமானது. விற்று, வரும் பணத்தைப் பாதியாகப் பங்கிடுவது என்று தீர்மானம் ஆனது.

பகல் வேளையில் பானையோடும் பணத்தோடும் ஊருக்குள் போனால் அகப்பட்டுக் கொண்டால் என்னாவது என்ற கவலை இருவரையும் வாட்டியது. இருட்டட்டும் என்று இருக்க இருக்கப் பசி இருவரையும் வதைத்தது.

ஒருவர் காவல் இருக்க, இன்னொ

**சுகி சிவம்**

ருவர் ஊருக்குள் போய் உணவு கொண்டு வரலாம். யார் போவது? பானையோடு மற்றவர் ஓடி விட்டால்? பயம்... பயம்... திருவுளச் சீட்டு போட்டு ஒருவர் ஊருக்குள் புறப்பட்டார். இன்னொருவர் ''இந்த இடத்தை விட்டு ஓட மாட்டேன். நீ திரும்பி வரும்வரை இருப்பேன்... சாமி சத்தியம்... பிள்ளை குட்டிகள் மீது ஆணை'' என்று ஒரு போடு போட்டார்.

ஊருக்குள் போனவர் திரும்பி வரும் காலத்திற்குள் தங்கத்தின் நிறம், குணம், மணம் இவரை என்னவோ செய்தது. பக்கத்தில் வளர்ந்திருந்த மூங்கிலைப் படீர் என்று உடைத்தார். கத்தி போலக் கூர்மையாக ஒடிந்தது அது. கண்ணில் வெறி ஏறியது. ஊருக்குள் போய் வந்தவர் உணவைக் கொண்டு வந்து வைத்துவிட்டு நிமிர்ந்தார். அடுத்த விநாடி.... கூரான மூங்கில் அவர் வயிற்றில் பாய்ந்தது. 'ஆ' என்று அலறிச் சாய்ந்தார் அவர். கொஞ்ச நேரம் தங்கத்தின் பக்கத்தில் இருந்தவரைப் பணம் அந்தப் பாடு படுத்தியது... நம்பிக்கைத் துரோகம் செய்ய வைத்தது.

கொலைகாரக் கையைக் கழுவி விட்டு உணவுக் கூடையைத் திறந்து பசியார உண்டார் அந்தத் தங்க விழுங்கி! பசி முடிந்ததும் வெற்றிச் சிரிப்போடு கை கழுவும் போது... தலை சுற்றியது... மயக்கம் வந்தது..... சரிந்து விழுந்தார். உணவு கொண்டு வர ஊருக்குள் போனவர் உணவோடு விஷம் கலந்து வைத்தது இவருக்குத் தெரியுமா என்ன?

பானைக்கு அந்தப் பக்கம் ஒரு கொலைகாரப் பிணம்! இந்தப் பக்கம் ஒரு கொலைகாரப் பிணம்! காலை அந்த வழியில் போன துறவி மாலை அதேவழியில் திரும்பி வந்தார். பார்த்தவர் பதறிப் போனார்! ''ஐயோ ஆட்கொல்லி இருவரைக் கொன்றுவிட்டதே! இன்னும் எத்தனை பேரைக் கொல்லுமோ'' என்று வருந்தினார்.

பொருள் நமது வேலையாள்; எஜமான் அல்ல. இதைப்புரிந்து கொண்டவன் மனிதன். புரிந்து கொள்ளாதவன் மிருகம். பொருளாசைக்கே அடி பணியாதவன் துறவி. பொருளின் தேவையை வென்றவன் ஞானி!

கிரேக்க நாட்டின் டையோஜனீஸ் பற்றி நிறையச் செய்திகள் உண்டு. அவர் தேவைகளே அற்ற எளிய வாழ்க்கையின் இன்பத்தை நுகர்ந்தவர். ஒரு சமயம், சக்கரவர்த்தி அவர் குடிலின் கதவருகே நின்றார். உள்ளே இருந்த எளிமை சக்கரவர்த்தியை வாசலுக்கு வெளியிலேயே நிற்க வைத்தது.

''என் ஆட்சிக் காலத்தில் இப்படியொரு தீர்க்க தரிசி என் நாட்டில் இருப்பது எனக்குப் பெருமை சேர்க்கிறது'' என்று சக்கரவர்த்தி சந்தோஷப் பட்டுச் சொன்னார்.

''உங்களுக்கு ஏதும் உதவி தேவை என்றால் என்னிடம் தாராளமாகக் கேட்கலாம்!''

''எனக்கு எல்லாம் இருக்கிறது. எதுவுமே வேண்டியதில்லை'' - ஞானியின் உறுதியான வார்த்தைகள், மன்னனுக்கு ஏமாற்றம் அளித்தன.

கொடுக்காமல் போவதில்லை என்ற ஆணவக் கொடை அவனை வதைத்தது. ''ஏதாவது உதவி நீங்கள் பெற்றே ஆக வேண்டும். உதவி செய்யாமல் நான் போகப் போவதில்லை!''

''ம்.... அப்படியானால் ஒரே ஒரு உதவி செய்.'' - ஞானம் பேசியது.

''என்ன வேண்டும்?'' - ஆணவம் கேட்டது.

''கடவுள் இலவசமாகக் கொடுத்த காற்றையும் வெளிச்சத்தையும் மறைத்துக் கொண்டு நிற்கிறாய். வாசலிலிருந்து கொஞ்சம் விலகி, வழிவிட்டு நில்!''

(இன்னும் சொல்வேன்)

## குழந்தை மேதை குஞ்சப்பா

'யோ'








# வளர்ச்சி...

1990-91-ஆம் ஆண்டில் வரலாறு காணாத வகையில் புது வணிகம் செய்து ஒரு புதிய சாதனையை ஏற்படுத்தினோம். மேன்மேலும் மக்களின் வருங்காலத்தைப் பாதுகாப்பதே குறிக்கோளாய்க் கொண்டுள்ளோம்.

86,48,192 தனிநபர் பாலிஸிகள் மூலம் ரூ. 28,152.16 கோடித் தொகையும் குழுப் பாதுகாப்பு மூலம் 17,20,232 நபர்களின் ஆயுளைப் பாதுகாத்து ரூ. 3,392.05 கோடித் தொகையும் புது வணிகம் செய்யப்பட்டுள்ளது.

நமது நாடு மிகவும் கடினமான பொருளாதார நெருக்கடியை சந்திக்கும் காலத்தில் கூட எல்ஐசி. இந்த

# வளர்ச்சி...

சாதனையைப் புரிந்தது குறிப்பிடத்தக்கது. எல்ஐசி. கடந்த பல ஆண்டுகளாகவே அதிக வளர்ச்சி அடைந்து வந்து, இந்தியாவில் உள்ள மிகப்பெரிய நிதி நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.

ஆனால், வழக்கம் போல், அடுத்த ஆண்டிற்கு இதைவிட இன்னும் மேல்நோக்கி செல்வதைக் குறிக்கோளாய் கொண்டுள்ளோம்.

# வளர்ச்சி

**எல்ஐசி-யின் புது வணிகம் ரூ. 28,152.16 கோடியாக இதுவரையில்லா உச்சக்கட்டத்தை அடைந்துள்ளது. 1 கோடி நபர்களுக்கு மேல் பாதுகாப்பு வழங்கப்பட்டுள்ளார்கள்.***



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

மக்கள் சேவையிலே

*குழுப் பாதுகாப்புத் திட்ட பாலிஸிகளையும் சேர்த்து

daCunha LIC 6 91 Tm

# தி.மு.க. படுதோல்விக்கு என்ன காரணம்?

★ நல்லாலம் காசிதாசன், வந்தவாசி.

? 'ஆட்சிக்கு வந்தால் மலிவு விலை மதுவை ஒழிப்பேன்' என்று கூறிய ஜெயலலிதா அவ்வாறு இப்போது செய்ய முடியுமா?

! முடியும். பூரண மதுவிலக்கு கூடக் கொண்டு வர முடியும். ஆனால் அதனால் ஏற்படும் வருவாய் இழப்பை எப்படி ஈடுகட்டுவார் என்பதுதான் பிரச்னை. ஏனெனில் இந்த வருவாயை நம்பி முந்தைய அரசு பல செலவினங்களை அதிகரித்து விட்டிருக்கிறது. எனவே சிக்கனம் + புதிய வரிகள் தேவைப்படும். இவை ஜெவிடம் அதிருப்தி தோற்றுவிக்கும். இதனைச் சமாளித்து வெற்றி பெறுவதிலேதான் அவர் தம் திறமையைக் காட்ட வேண்டும்.

★ ஏ. ஜமால் மொய்தீன், செங்குன்றம்.

? புதிய அரசாவது ஐந்தாண்டு காலம் நீடிக்குமா?

! கூட இருந்து குழிபறிப்பவர்கள் காங்கிரஸில் இல்லாமல் இருந்தால் நிச்சயம் நீடிக்கும்.

★ எல். ஆர். சப்தரிஷி, ஹோசூர்.

? தந்தையின் இறுதி ஊர்வலத்தில் திடமான மனத்தோடு கலங்காமல் நின்று தன் தாயைத் தேற்றிய பிரியங்கா பற்றி...?

! பாராட்டலாம்தான்; ஆனால் அதைப் பார்த்து விட்டு அதனாலேயே அவர் எதிர்காலப் பிரதமராவதற்குத் தகுதி பெற்று விட்டது போல அயல்நாட்டவர் உள்படச் சிலர் பேசுவதுதான் இடிக்கிறது.

★ கே. மதுரகீதா, கும்பகோணம்.

? ஆளுனரின் தமிழக ஆட்சிக் காலம் பற்றி?

! 'லீவு போட்டு விட்டு காசி போகிறேன்' என்று கூற, 'ஆட்சி மாறும் சமயம் எங்கும் போகக் கூடாது' என்று ஜனாதிபதி உத்தரவு பிறப்பிக்க நேர்ந்தது பாராட்டும்படியில்லை. தவிர, இவர் ஆட்சியின் போது தான் இங்கு ராஜீவ் படுகொலை செய்யப்பட்டார் என்பது ஒரு களங்கமாகவே என்றும் இருக்கும்.

★ கே. அருணாசலம், தென்காசி.

? இன்றைய அரசியல்வாதிகளில் துணிச்சல் மிக்கவர் யார்? யார்?

! பிரதமர்களை ஆட்டுவிக்க முனையும் சந்திரசாமிகளும் முதல்வர்களை ஆட்டுவிக்க முயலும் நடராஜன்களும்.

★ ஆர். எஸ். இராஜ், காரைக்கால்.

? ரத்த ஆறு ஓடிக் கொண்டிருக்கும் நேரத்தில் பஞ்சாபில் தேர்தல் அவசியம் என்று நினைக்கிறீர்களா?

! அலை ஓய்ந்த பின் சமுத்திர ஸ்நானம் நடக்காத காரியம். தேர்தல் என்றதும் பயங்கரவாதிகள் தீவிரம் அடைவது தேர்தலைக் கண்டு அவர்கள் பயப்படுவதை உணர்த்தும். மக்கள் பயங்கரவாதத்தை வெறுப்பதையும் ஜனநாயகத்தை விரும்புவதையும் உணர்த்த தேர்தலை விட்டால் வேறு வழியில்லை. ஒருமைப்பாடு ஓங்க மக்கள் தைரியமாக வோட்டளிக்க முன்வர வேண்டும்.

★ எஸ். யோகலிங்கம், சென்னை - 82.

? ராஜீவ் கொலைக்கு விடுதலைப் புலிகள்தான் காரணம் என்று கண்டு பிடிக்கப்பட்டிருப்பது குறித்து?

! அதில் என்றைக்குச் சந்தேகம் இருந்தது? 'அந்தச் சதியில் தி. மு. க. வுக்குப் பங்குண்டு' என்பதுதான் கோயபல் பிரசாரம்.

★ கே. ஏ. காளிமுத்து, இராணிப்பேட்டை.

? தி. மு. க. படுதோல்வி அடைந்ததற்கு என்ன காரணம்?

! மேற்படி கோயபல் பிரசாரம் பாதி; தி. மு. க. ஆட்சியில் நடந்த தவறுகள் பாதி.

★ என். பாலு, கம்பரசம்பேட்டை.

? செத்து விட்டதனாலேயே ஒருவரது குணக் கோளாறுகளைக் கூறக் கூடாது என்பது பத்தாம்பசலித்தனம் இல்லையோ?

! இடமறிந்தும் காலமறிந்தும் பேசவும் எழுதவும் வேண்டும். ஒருவர் உயிரோடு இருக்கும் போது, அவரது குற்றங் குறைகளை நட்பு முறையில் மெய்யான அன்புடனும் அக்கறையுடனும் எடுத்துக் காட்டுதல் நல்லது. ஒருவர் இறந்த பிறகு, அவரது சிறப்பு இயல்புகளை எண்ணிப் பார்த்து வருந்துதல் சரி. ஒருவரது சரித்திரம் எழுதப்படும் போது, குறை நிறைகளை விருப்பு வெறுப்பு இன்றிச் சுட்டிக்காட்டி எழுதுவது நியாயம்.

★ சி. சிவகுமார், குடியாத்தம் ★

? கலைஞர் சட்டசபைக்குச் செல்லலாமா?

! சென்றே ஆக வேண்டும். 'தோல்வி அடைந்தால் சட்டசபைக்குப் போக மாட்டோம் என்று பிடிவாதம் செய்ய மாட்டோம்; பொறுப்புணர்வுடன் எதிர்ப்புப் பணியாற்றுவோம்' என்று அவர் ஏற்கெனவே கூறியுள்ளதை மெய்ப்பித்தாக வேண்டும். மேலும் எதிர்ப்புப் பணியாற்ற சட்டமன்றத்தில் அதிகம் பேரில்லை என்பதால் இவரது பொறுப்பு பன்மடங்காகி விட்டதை உணர்ந்து செயல்பட வேண்டும். தி.மு.க. அங்கத்தினர்கள் நூறு பேர் இருப்பதும் ஒன்றுதான் கருணாநிதி ஒருவர் மட்டுமே இருப்பதும் ஒன்றுதான் என்று நிரூபிக்க வேண்டும். ஆட்சியில் இருப்பதை விட எதிர்ப்புப் பணியிலேயே அதிகம் பிரகாசித்தவர் கருணாநிதி. இப்போது சோர்ந்து விடக் கூடாது.

★ சிந்துகுமார், திருவட்டார்.

? சந்திரசேகர் பிரதமர் பதவியை விட்டுப் போவதற்குள் மக்களை ஒரு வழி பண்ணி விடுவார் போலிருக்கே?

! அந்த அளவுக்கு அவருக்கு அவகாசம் அளிக்கப்பட்டிருந்தால் செய்து காட்டியிருப்பார். நல்லவேளை சீக்கிரமே பதவிக் காலம் முடிந்து விட்டது. ஒரு உதாரணம் பாருங்கள்: தேர்தலுக்கு முன் மந்திரி சபை - அதுவும் இடைக்கால அரசு - சலுகைகள் காட்டக் கூடாது என்ற தேர்தல் நன்னடத்தை விதிமுறைகளை மீறி, 12,000 டெலிஃபோன் தொடர்புகள் வரிசை மீறித் தரப்பட்டுள்ளன. இதற்காக, ''சபாஷ் சஞ்சய்!'' என்று அமைச்சர் சஞ்சய் சிங்குக்குப் பாராட்டுத் தெரிவித்து ஃபைலிலேயே எழுதியிருக்கிறார் விடைபெறும் பிரதமர் சந்திரசேகர்!

★ சி. ப. சாமி, கொங்கணாபுரம்.

? சட்டமன்றத்துக்கு மக்கள் சரியான தீர்ப்பை வழங்கியிருக்கிறார்களா?

! அபரிமித மெஜாரிட்டியை நல்ல தீர்ப்பு என்று கருத முடியாது; ஆனால் ஜனநாயகத்தில் மக்கள் வழங்கிய தீர்ப்பை யார் தட்டிக் கேட்க முடியும்? பொதுவாகவே நம் மக்கள் உணர்ச்சிவசப்பட்டுத்தான் வாக்களிக்கிறார்கள். அறிவுபூர்வமாகச் சிந்தித்து அல்ல. இந் நிலையை மாற்றத் தலைவர்கள் முனையாமல் இதை வளர்த்து விடுவது போல் நடந்து கொள்வதுதான் விசனிக்கத் தக்கது.

★ ரூ. 20 பரிசு பெறுபவர் :
சி. சிவகுமார்,
41, லால்பகதூர் சாஸ்திரி தெரு,
தரணம்பேட்டை,
குடியாத்தம் - 632 601.

★ எம். கே. சக்திவேல், சேலம்.

? அ. தி. மு. க. வின் இந்த மாபெரும் வெற்றிக்கு என்ன காரணம்?

! 'வெற்றியை நாங்கள் எதிர்பார்த்தோம்; அது மாபெரும் வெற்றியாக மாறியதற்கு ராஜீவ் மரணமும், அதனால் பெருகிய அனுதாப அலையும்தான் காரணம்' என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே!

★ எஸ். தமிழன்பன், தி. வெ. நல்லூர்.

? தீர்க்க முடியாத பிரச்னை என்று எதைக் குறிப்பிடுவது?

! பிரச்னைகளுக்குப் பஞ்சமே இல்லை. ஆனால் தீர்க்க முடியாத பிரச்னை என்பதாக ஏதும் கிடையாது. போதிய அளவு கவனம் செலுத்தப்படவில்லை என்பதே காரணம். உதாரணத்துக்கு ஒன்று: சென்னையில் வருமான வரி கட்ட வேண்டிய அளவில் சம்பளம் வாங்குவோர் 73,000 பேர். இவர்களில் 35,000 முதல் 40,000 வரை வருமான வரி ஃபாரம் பூர்த்தி செய்து அளிக்கிறார்கள். எதற்குத் தெரியுமா? அதிகப்படியாகப் பிடிக்கப்பட்டுள்ள வரியைத் திரும்பப் பெற! இதை வருமான வரி அதிகாரிகளே கூறுகின்றனர். எங்கேயோ கோளாறு இருப்பது தெரியவில்லையா? சிந்தித்துச் சரிப்படுத்தலாமே!

★ மதுவை ஒழிப்பாரா...?



★ எதிர் காலப் பிரதமர்?



★ சட்டசபை செல்லலாமா?



★ ''சபாஷ் சஞ்சய்!''



நீங்கள் கேட்டவை - தராசு




## ரு. 250 பரிசுப் போட்டி !

## வகுப்பறையில் விஷமம் !

வகுப்பறையில் விஷமம் செய்யும் இந்தச் சிறுவர்களைப் பாருங்கள்! கற்பனைக் காட்சியிலாவது அவர்கள் சுதந்திரமாக, சந்தோஷமாக இருக்கட்டுமே என்ற நல்லெண்ணம் ஓவியர் செல்லத்துக்கு!

ஆனால் ஓவியர் செல்லம் தம் பங்குக்குச் சில

விஷமத்தனமான தவறுகளை இப்படத்தில் செய்திருக்கிறார். எல்லாத் தவறுகளையும் கண்டுபிடித்து எழுதியனுப்பும் வாசகருக்கு ரூ. 250 பரிசு தரப்படும்!

மிக அதிகமானோர் இப்போட்டியில் சரி யான விடைகளை எழுதினால், பரிசுத் தொகை குலுக்கல் முறையில் யாரேனும் ஒரு வாசக ருக்குத் தரப்படும்.

உறையின் மேல் 'வகுப்பறையில் விஷமம்!' என்று குறிப்பிட்டு, 8.7.91 க்கு முன் விடை களை அனுப்ப வேண்டும்.

- ஆசிரியர்



ருக்க நியாயமில்லை என்று வாதாடி அவளைத் தள்ளி வைக்க, பஞ்சாயத்தாரின் அனுமதி கோருகிறான் அவள் கணவன். துக்கம் பீறிட, தான் களங்கமற்றவள் என்று கைகூப்பிக் கதறுகிறாள் மனைவி. என்ன நியாயம் சொல்வது என்று யாருக்கும் தெரியவில்லை.

என்னுடைய கதாபாத்திரம் காட்சியில் நுழைகிறது. ''நான் ஒரு நியாயம் சொல்லலாமா'' என்று பஞ்சாயத்தாரின் அனுமதியைக் கேட்கிறது. அனுமதி வழங்கப்படுகிறது.

அந்தக் கணவனை நான் நெருங்கி வெத்தலை, பாக்கு கொடுத்துப் போடச் சொல்கிறேன். அவனும் சற்றுக் குழப்பமடைந்து, தயங்கித் தயங்கிப் போடு கிறான். நன்றாக மெல்லச் சொல்லுகிறேன். மெல்லுகிறான்.

அவன் மென்று கொண்டிருக்கும் போதே ஒரு வசனம் சொல்லுகிறேன்:

''கண்ணா! நீ மெல்றியே அந்த வெத்தலையோட நிறம் பச்சை. பாக்கோட நிறம் கறுப்பு. சுண்ணாம்போட நிறம் வெள்ளை. மூணையும் சேத்து வாயிலே போட்டு அரைக்கிறே! இப்பொ உன்னோட வாய் பச்சையா மாறினா ஒத்துக்குவேன். கறுப்பா மாறினாலும் ஒத்துக்குவேன். வெள்ளையா மாறினாலும் ஒத்துக்குவேன். தப்பித் தவறி உன் வாயிலே வேறே ஏதாவது நிறம் வந்துது... நாக்கை இழுத்து வைச்சு அறுத்துடுவேன்!''

அவன் மெல்வதை நிறுத்துவான். இலேசாக முழிக்க ஆரம்பிப்பான். அந்தப் பெண்மணி முகத்தில் கவலை குறைய ஆரம்பிக்கும். பஞ்சாயத்தார் கொஞ்சம் நிமிர்ந்து உட்காருவார்கள். அந்தக் கணவன் மெதுவாகத் தன் தவறை உணர்ந்து, குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு, மனைவியை அணைத்தவாறு, பஞ்சாயத்தாரிடம் மன்னிப்பு கேட்டபடி நழுவி விடு

# வாழ்க்கை சினிமாவானதும்;

ஒரு சகோதரி எனக்கு ஒரு கடிதம் எழுதி இருந்தார். பெயர், விலாசம், ஊர் எதுவும் குறிப்பிடப்படவில்லை. கடிதத்தில் நான்கு வரிகள்தான்:

''ஐயா, நானும் கறுப்பு. என் கணவரும் கறுப்பு. ஆனால் எங்களுக்குப் பிறந்த குழந்தை சிவப்பாகப் பிறந்து விட்டது. அவர் என்னைச் சந்தேகிக்கிறார். அவருக்கு உறைக்கும்படி உணர்த்துங்கள். அடுத்த படத்திலேயே உணர்த்துங்கள். அவர் உங்கள் படங்களைக் கண்டிப்பாகப் பார்ப்பவர். பார்த்தாவது உணரட்டும்.''

நான் என் மூளையைச் சுரண்டினேன். ஒரு பெரிய பொறுப்பு தலையில் விழுந்ததாக உணர்ந்தேன். என் சகோதரி ஒருவரே ஏதோ ஓர் இடத்தில் தவிப்பதாக ஓர் உணர்வு. முகம் தெரியாத அந்தச் சகோதரிக்கு இந்தச் சகோதரனின் ''சீராக'' ஒரு நெத்தி அடி காட்சி அமைந்தாக வேண்டும்.

படம்; ''வேடிக்கை என் வாடிக்கை''. என்னுடைய கதாபாத்திர அறிமுகக் காட்சி. ஒரு பஞ்சாயத்து நடந்து கொண்டிருக்கிறது. ஊரே அங்கு கூடி இருக்கிறது. பஞ்சாயத்தார் குழம்பிப் போய் இருக்கிறார்கள். ஒரு கறுப்பு ஆணும் ஒரு கறுப்புப் பெண்ணும் எதிர் எதிரே நின்று கொண்டிருக்கிறார்கள். நட்ட நடுவே ஒரு சிவப்புக் குழந்தை தரையில் போடப்பட்டு இருக்கிறது. அந்தக் குழந்தை தனக்குப் பிறந்தி



வான்.

அந்தக் காட்சியை எழுதிய அன்றே, அதைப் படமாக்கி, அன்று மாலையே படத்தை ரிலீஸ் செய்து விட வேண்டும் என்று ஒரு வேகம்! ஆனால் அது எப்படி முடியும்? மூன்று மாதங்கள் சென்று படம் ரிலீசாகியது.

படத்தின் ரிப்போர்ட் எனக்கு ஏமாற்ற மாக இருந்தது: இருந்தாலும் எனக்கு மறு படியும் பெயர், ஊர், விலாசம் குறிப்பிடப் படாமல் ஒரு கடிதம் வந்தது. இந்த முறை இரண்டே வரிகள்தான். ''நன்றி! திருந்தி விட்டார்'' அந்தப் படம் கமர்ஷியலாக வெற்றி பெறவில்லை என்று சொல்லப் பட்டாலும், அந்தப் படத்தின் அந்தக் காட்சி எனக்கு எவ்வளவு பெரிய வெற்றியைக் கொடுத்தது என்பது எனக்கு மட்டுமே தெரியும்.



# சினிமா 'வாழ்க்கையானதும்!'

நான் கதாசிரியனாக, நடிகனாக, இயக்குனராக இருப்பது எவ்வளவு பெரிய அனுகூலம் பார்த்தீர்களா? சரி... சரி... சங்கடத்தையும் சொல்லி விடுகிறேன். கேளுங்கள்:

என்னுடன் பணிபுரியும் ஒரு நடிகர். பெயரைச் சொல்ல மாட்டேன். நல்ல நண்பர். தமது திருமணத்துக்குப் பெண் பார்த்த கையோடு ஓடோடி வந்து தம் வருங் கால மனைவி போட்டோவை எனக்கு முதன் முதலாகக் காட்டியவர். அந்த அளவு என் மேல் அவருக்கு ஒரு மரியாதை. கிட்டத்தட்ட அவருக்கு நான் God father.

அன்று -

நான் எடுத்திருந்த ''வரவு-நல்ல-உறவு'' படத்தை முதன் முதலாக விஜயா கலர் லேப்பில் நான் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்தேன். சினிமா உலக பாஷை யில் அதை "FIRST COPY" என் பார்கள். அதை Lab இல் பார்க்கும் அன்று அனைத்துத் தொழில் நுட்பக் கலைஞர் களும் ஒரே டென்ஷனில் இருப்பார்கள்.

விசு

நான் சற்றும் எதிர்பாராத வகையில் அந்த நடிகரும் அங்கு வந்து விட்டார். அவ ருக்கும் அந்தப் படத்துக்கும் சம்பந்தமே கிடையாது. வந்ததுதான் வந்தார் தனியாக வந்தாலும் பரவாயில்லை. ஊரிலிருந்து வந்த தமது தகப்பனாரையும் அழைத்துக் கொண்டு வந்து விட்டார். சாதாரணமாக FIRST COPY பார்க்கும் அன்று சம்பந்தப் படாதவர்களை அனுமதிப்பதைத் தயாரிப் பாளர் விரும்பவே மாட்டார். ''வரவு-நல்ல-உறவு'' படத்தின் நிர்வாகத் தயாரிப் பாளர் நடராசன் அவர்களிடம் நிலைமை யை எடுத்துச் சொல்லி அவர்கள் இருவ ரையும் படம் பார்க்க நான் அனுமதித்தேன்.

ரிடையர் ஆனவுடன் தனக்கு வந்த மொத்த பணத்தையும் தன் குழந்தைகளுக்கு ஆசை ஆசையாகக் கொடுத்து விட்டு, பிறகு தன் குழந்தைகள் மூலம் அவமானப்பட்டு, அவமதிக்கப்பட்டு, அலைக்கழிக்கப்படும் ஒரு குடும்பத் தலைவனின் சோகக் கதை ''வரவு-நல்ல-உறவு''. கையில் பணமும் இல்லாமல் நிராதரவாக, அனாதையாக, நடுரோட்டில் நிறுத்தப்படுகிறார். தனக்கு மிஞ்சித்தான் தானமும் தர்மமும் என்ற வேதவாக்கை முதுகெலும்பாகக் கொண் டதுதான் அந்தப் படம்.

படத்தைப் பார்த்து முடிந்தவுடன், அனைவரும் எழுந்து வெகு நேரம் ஆன வுடன் கூட அந்த நடிகரின் தந்தை தமது

இருக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. அவரை அவரது மகன் தட்டி எழுப்பிய வுடன்தான் இந்த உலகத்துக்கே வந்தார். என் கையைப் பிடித்தார். கண்களில் கண்ணீர். ஒரு வார்த்தை பேசவில்லை. வீட்டுக்குச் சென்று விட்டார்.

மறுநாள் அந்த நடிகர் என் வீட்டுக்கு போன் செய்தார். குரல் சற்று கம்மி இருந்தது: ''சார், எங்கப்பா ஊர்லேர்ந்து மெட்ராஸுக்கு எதுக்கு வந்தார் தெரியுமா? அவருடைய சொத்துக்களை எனக்கும், என் சகோதர சகோதரிகளுக்கும் பிரிச்சுக் கொடுக் கறதைப் பத்திப் பேசத்தான். என் போறாத காலம் அவரை அந்தப் படத்துக்குக் கூட்டி வந்தேன்'' என்றார்.

''ஏன் என்ன ஆச்சு?'' என்று கேட் டேன். விளக்கினார்:

அவர் தகப்பனார் சொல்றாராம்: ''இந்தக் காலத்துப் பசங்க அப்பா அம்மா வுக்குக் கொடுக்கற மரியாதையை விட, அவங்களோட சொத்துக்குத்தான் அதிக மரியாதை கொடுக்கிறாங்கங்கற கேவல மான உண்மையை விசு ரொம்ப அழகாச் சொல்லிட்டார். நான் சம்பாதிச்சதையெல் லாம் இப்பவே உங்களுக்குப் பிரிச்சுக் கொடுத்திட்டு, அப்புறம் கையிலே காசில் லாம உங்க காலாலே மிதிபடறதை விரும் பலை. என் சொத்தெல்லாம் உங்களுக்குத் தான். ஆனா நான் செத்ததுக்கப்புறம் எடுத் துக்குங்க. உயிரோட இருக்கறப்ப பிரிச்சுக் கொடுத்துட்டு நான் இளிச்சவாயனா இருக்க விரும்பலை.''

எனக்கு உலகம் சுற்றியது! நடிகர் டெலிபோனில் தொடர்ந்தார்:

''ஏன் சார்? இப்படி ஒரு படம் எடுத் துட்டீங்களே. ஓல்டர் ஜெனரேஷனுக்கு யங்கர் ஜெனரேஷன் மேலே ஒரு வெறுப் பை ஏற்படுத்திட்டீங்களே. இனிமே எங்கப்பா கிட்டே நான் எவ்வளவு தான் அன்பா பேசினாலும் அது அவர் சொத்துக் காகத்தான்னு அவர் நினைக்கும்படி பண்ணிட்டீங்களே! சார், எனக்கு அவர் சொத்திலே நயா பைசா வேணாம். அவர் அன்பு மட்டும் போதும். இப்ப நான் என்ன சார் செய்யறது?''

நான் வாயடைத்துப் போனேன்.

ஆக, சினிமாவில் நீங்கள் காணும் ஒவ்வொரு நிழலான காட்சிக்குப் பின்னா லும், ஒவ்வொரு நிஜமான உண்மை அரங் கேறிக் கொண்டுதான் இருக்கிறது.

(நிழல்கள் தொடரும்)

# சேர்ந்து படிப்பதில் சுவை உண்டு!

''அம்மா! நான் என் ஃபிரெண்ட் வீட்டுக்குப் போய்ப் படிக்கப் போறேன்...'' என்றபடி புத்தகங்களுடன் பிள்ளைகள் வெளிக் கிளம்புவதை இந்தக் காலத்துப் பெற்றோர்கள் ஏற்றுக் கொண்டு விட்டார்கள்.

'எப்படிப் படித்தால் என்ன, குழந்தைகள் நல்ல மார்க் வாங்கினால் சரி...' என்பதே அவர்களுடைய கோட்பாடு.

''நான் நண்பர்களுடன் சேர்ந்து படிப்பதை ஆரம்பத்தில் என் பெற்றோர்கள் முழு மனத்தோடு ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் நாங்கள் உண்மையிலேயே படிக்கத்தான் செய்கிறோம் என்பதை எங்கள் 'மார்க்கு'கள் நிரூபித்ததும் சமாதானமாகி விட்டார்கள்...'' என்கிறான் ராஜா.

நண்பர்கள் வீட்டுக்குப் போவதால் கிடைக்கும் இடமாற்றமும், சின்ன 'அவுட்டிங்'கும் புத்துணர்ச்சி ஏற்படுத்தினாலும், 'கம்பைண்டு ஸ்டடீஸ்' என்ற போர்வையில் அரட்டை அடிப்பது, திருட்டுத்தனமாக சினிமாவுக்குப் போவது, வெறுமே 'ஹாய்'யாக இருப்பது போன்ற பெற்றோருக்கு வெறுப்பூட்டும் காரியங்களும் நடக்கத்தான் செய்கின்றன!

''சேர்ந்து படிக்க முற்படும் மாணவர்கள், முப்பது சதவிகித நேரம் படித்து விட்டு எழுபது சதவிகித நேரத்தை ஊர் சுற்றலில் வீணாக்குவதுண்டு; இதற்கு மாறாக எழுபது சதவிகித நேரம் படித்து விட்டு முப்பது சதவிகிதப் பொழுதை ஊர் சுற்றப் பயன்படுத்தும் மாணவர்களும் இருக்கிறார்கள்'' என்று சிரித்தபடி கூறுகிறார், பி. காம். இரண்டாம் ஆண்டு பயிலும் அஜித் ராமலிங்கம். தாம் இரண்டாம் ரகத்தைச் சேர்ந்தவர் என்றும் கூறுகிறார் அஜித்.

பச்சையப்பன் கல்லூரி கிரிக்கெட் அணியில் விளையாடிய சங்கர், தாம் படித்த காலத்தில் 'கம்பைண்ட் ஸ்டடீஸ்' செய்ததற்கு மிக நியாயமான காரணம் எடுத்துச் சொல்கிறார்:

''நான் விளையாட்டுப் போட்டிகள் நிமித்தம் அடிக்கடி வெளியே போக வேண்டியிருந்ததால் ஒழுங்காக வகுப்புகளுக்குப் போக முடியாமல் இருந்தது. அதனால் சக மாணவர்களிடம் போய் உதவி கேட்பேன். அவர்கள் உதவியின்றி என்னால் பரீட்சை எழுதி 'பாஸ்' செய்திருக்க முடியுமா என்பது சந்தேகமே! அவர்கள் எனக்குப் பாடத்தை விளக்கும் போது அவர்களும் ரிவைஸ் செய்தது போலாகி விட்டதால் சந்தோஷத்துடன் ஒத்துழைத்தனர்.''

நண்பர்களுடன் சேர்ந்து படிப்பதில் அனுகூலம் இருக்கிறதா...?

''நிச்சயம் இருக்கிறது'' என்கிறார் லேடி சிவசாமி பள்ளியில் படிக்கும் மாலா ராமசாமி. ''முதலில் குறிப்பிட்ட பாடத்தை எடுத்துக் கொண்டு அதை வாய்மொழியாக அலசி விடுவோம். அந்த அலசலின் அடிப்படையில் குறிப்புகள் எடுத்துக் கொள்வோம். ஒருவரோடொருவர், குறிப்புகளை ஒப்புநோக்கி, விட்டுப் போனவற்றைப் பூர்த்தி செய்து கொள்வோம்.''

''என் தோழிகளுடன் சேர்ந்து படிக்கும் போதுதான் எனக்குப் படிக்கிற 'மூட்' வருகிறது. 'நாம் பின்தங்கி விடக் கூடாது' என்ற போட்டி மனப்பான்மை உருவாகி, படிப்பு சூடு பிடிக்கிறது'' என்கிறார் ரேகா பத்மநாபன். ''இந்த முறையில் படிப்பது உற்சாகமாக இருக்கிறது'' என்கிறார் அஜித். ''கணக்கு போன்ற ஒருசில பாடங்களைத்தான் இம் முறையில் படிக்கலாம்'' என்கிறார் ரேகா.

புவனேஸ்வரியும், நாராயணி சந்திரமோஹனும் (அட்டைப் படம்) சாரதா வித்யாலயா மாணவிகள். 'கம்பைண்ட் ஸ்டடீஸி'ல் இவர்களுக்குப் பூரண நம்பிக்கை.

''நாங்கள் நான்கு பேர் ஒன்று சேருவோம்... (அதற்கு மேல் போனாலும் சரிப்படாது;குழப்படியாகி விடும்). கிளாஸ் டெஸ்ட் முதல் முழுப் பரீட்சை வரை எல்லாவற்றுக்கும் ஒன்றாகவே படிப்போம். கம்பைண்ட் ஸ்டடீஸுக்கு வரும் போது, முன்கூட்டியே தனித்தனியாக அவரவர்கள் படித்து விட்டு வருவோம். ஒன்று கூடியதும் எங்களுள் யாரேனும் ஒருவர் ஆசிரியராக மாறி, ஒரு குறிப்பிட்ட பாடம் அல்லது பகுதியை விளக்க வேண்டும். விளக்கும் நபர் கூறாது விட்டு விடும் 'பாயின்டு'களை மற்றவர்கள் கூறி இட்டு நிரப்பி விடுவோம். இதனால் எங்கள் முறை பூரணமானதாக இருக்கும்... பரீட்சை எழுதும் போது எங்கள் அலசல் அப்படியே மனத் திரையில் ஓடும்; விடை எழுதுவது ரொம்பச் சுலபமாய் இருக்கும்....'' என்கிறார் புவனேஸ்வரி.

''சில சமயம், சேர்ந்து படிக்கும் நான்கு பேரும் பரீட்சையில் ஒரே தவறைச் செய்வதும் உண்டு!....'' என்றார் நாராயணி.

– எஸ். ராமன்.

அட்டை வண்ணப்படம் : உத்ரா





# புதிய ராகம்

கணவனுடைய கொடுமைகளையும்,
அவன் செய்யும் மோசடிகளையும் நெஞ்சுக்
குள்ளேயே விழுங்கி, அத்தனைக்கும் ஈடு
கொடுத்து அவன் கட்டிய தாலிக்கு மதிப்ப
ளிக்கும் மனைவி -

அந்தத் தாலியே தனக்கு இடையூறு
விளைவிப்பதாக முடிவெடுக்கும் கணவன்
அதனைப் பறித்து விட்டெறிய -

பட்டென்று அவனுடைய தொடர்பு
களை அத்துடன் வெட்டிக் கொண்டு தலை
நிமிர்ந்து அவள் வெளியேறி விடுவதுதான்
'புதிய ராகம்'.

கதை, திரைக்கதை, இயக்கம், தயா
ரிப்பு இவற்றுக்குப் பொறுப்பேற்றுள்ள
ஜெயசித்ராவுக்கு அது ஒரு 'டெய்லர்மேட்'
பாத்திரம். அளவாகக் குமுறி, அளவாக
அடங்கிப் போய், ஒரு வரையறைக்குள் தன்
உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறார்.

குழைவுச் சிரிப்பும் நரித்தனமான பேச்
சும் கணத்தில் குமுறிப் பொங்கும் குரூரமு
மாக - கணவன் பாத்திரத்தில் ரகுவரன்.

இந்த இருவரும் கதைக் கட்டமைப்
பைச் சரிந்து விடாமல் தாங்கிப் பிடிக்கி
றார்கள்.

முதலில் ஜெயசித்ராவிடம் கொண்ட
காதல் தோல்வியில் துவண்டு, அதன் பின்
ளர் கட்டிய மனைவியையும் இழந்து,
சின்னஞ்சிறு கு ழ ந் தை யு ட ன் சோக
வாழ்க்கை மேற்கொள்ளும் ரகு தோற்றத்
தில் மட்டுமல்ல - வெளிப்பாடுகளிலும்
கச்சிதம்.

அந்தக் குழந்தை அம்ரேஷ்... தத்தித்
தத்தித்தளிர் நடை போட்டு, மழலையாக
'ம்மா' என்றழைத்து, கல்மிஷமில்லாத
சிரிப்புடன் கழுத்தைக் கட்டிக் கொள்ளும்
போது கொள்ளை கொள்வது ஜெய
சித்ராவை மட்டுமல்ல. பார்ப்பவர் உள்ளங்
களையும்தான்.

இரண்டு இசைக் கலைஞர்கள் சம்பந்
தப்பட்ட கதை. இசையமைத்திருப்பவர்
இளையராஜா. இப்படிக் குறிப்பிட்டாலே
போதும் - 'பாடல்கள் இனிமை' என்று
தனியாகக் குறிப்பிட வேண்டியதில்லை.

உணர்ச்சிப் போராட்டங்கள் நிறைந்த
ஒரு குடும்பக் கதையின் உச்ச கட்டமாக,
குழந்தையைக் கடத்தி வந்து, போனில்
ஜெயசித்ராவை ரகுவரன் மிரட்டுவதும்,
அதனை மீட்க வரும் ரகு அவரோடு மோது
வதும், அந்தப் போராட்டத்தின் போது
குழந்தையை ஏதோவொரு ஜேம்ஸ் பாண்ட்
பெட்டியைப் போலத் தூக்கியெறிந்து
தாவிப் பிடிப்பதும், மேல் மாடியிலிருந்து
கீழ் மாடிக்குக் குழந்தையுடன் தாவிக்
குதித்து உருண்டு எழுவதும், கடைசி
நேரத்தில் போலீஸ் வந்து ரகுவரனைக்
கைது செய்வதும் - தேவையற்ற மசாலா!

- சி. ஆர். கே.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளி
யிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. தொலைபேசி: ஆசிரியர் குழு அலுவலகம்:
2344145; சர்க்குலேஷன் மானேஜர்: 2344190: விளம்பரம் — சந்தா: 2344157: டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-: வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-: விமானத் தபால் ரூ. 700/-.
அரை மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-: வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/-: விமானத் தபால்: ரூ. 350/-.






# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவளது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம் போஷாக்கு நிறைந்த சீரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல் பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

இலவச நெஸ்டம் செய்முறை புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25, புது டில்லி-110016.

**எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி சீரியல்.**

# நெஸ்டம்



McCann. STUM/191/TM

